முதற்பதிப்பு: ஜனவரி, 1954.
இரண்டாம் பதிப்பு: செப்டம்பர், 1956.

மாருதி பிரஸ், இராயப்பேட்டை, சென்னை-14.

# பதிப்புரை

ஒருநாள் எனது நண்பர் ஒருவர் தலைவிரி கோலமாக ஓடி வந்தார். சந்தோஷத்தால் துள்ளிக் குதித்து ஓடிவந்ததால்தான் அவர் தலையெல்லாம் கலைந்து, அப்படித் தலைவிரி கோலமாகக் காட்சி யளித்தது. ஓடிவந்த மனிதர் என்னிடம் ஒரு கேள்வியைப் போட்டார்.

"'கல்கி' பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீமான் கல்கி இலங்கைக்குப் போனரல்லவா?"......என்ருர்.

"ஆமாம் போனர். போய்விட்டு வந்துதானே 'இலங்கையில் ஒரு வாரம்' என்ற தலைப்பில் கட்டுரை கூட எழுதுகிருர். போகாமலேயே எழுது கிருர் என்று சந்தேகப் படுகிறீரா?" என்றேன்.

"அதற்குச் சொல்லவில்லை ஐயா! போன மனிதர் ஏன் இப்படித் திரும்பி வந்துவிட்டார்" என்ருர்.

நான் மிகவும் கோபத்துடன் அவரை முறைத்துப் பார்த்தேன். அவரும் என்னுடைய கோபத்திற் குரிய காரணத்தைப் புரிந்து கொண்டுவிட்டார்.

"இல்லை. இவ்வளவு கஷ்டப்பட்டு இலங் கைக்குப் போனரே! ஒரு வாரத்திலேயே ஏன் திரும்பினர்? கூட இரண்டு மூன்று வாரம் இருந்து விட்டு வரக்கூடாதா? நமக்கெல்லாம் இலங்கையைப் பற்றி இன்னும் ஏராளமாக எழுதலாமே!" என்று சலித்துக்கொண்டார்.

'கல்கி' அவர்களின் "இலங்கையில் ஒரு வாரம்" கட்டுரையைப் படித்தவர்கள் எல்லோருக் குமே அவர் "இன்னும் எழுதமாட்டாரா? இன்னும் எழுதமாட்டாரா?' என்று ஆவல் ஏற்படத்தான் செய்யும்.

நாம் இலங்கைக்குப் போக வேண்டுமென்றால் பல தொந்தரவுகள் உண்டு.

பாஸ்போர்ட் வாங்கவேண்டும். விஸா வாங்க வேண்டும். பாஸ்போர்ட்டுக்கும் விஸாவுக்கும் உள்ள வித்தியாசத்தைப் பற்றிய ஆராய்ச்சி நடத்த வேண்டும். சுங்க அதிகாரிகள், சுகாதார அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள், எல்லாம் கேட்கும் கேள்விகளைக் கேட்டுப் பைத்தியம் பிடிக்காமல் தப்பிப் பிழைத்துப் போய்ச்சேர வேண்டும்.

ஆயிரம் வருஷங்களுக்குமுன் பழையாறைச் சுந்த சோழன், சைன்யங்களையும் கொன்றை மரங்களையும் திரட்டிக்கொண்டு இலங்கைக்குப் போய் ' ஜனநாத புரத்தை " நிர்மாணிப்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகளெல்லாம் நாம் பாஸ்போர்ட்டும் விஸாவும் வாங்குதற்குச் செய்யும் முயற்சிகளின் காலில் கட்டியடிக்கக் கூடக் காணாது.

ஆனால் இனிமேல் இலங்கைக்குப்போய்ப் பார்த்து விட்டு வரவேண்டுமானால் ஒருவிதச் சிரமமுமில்லை. நிம்மதியாக நாற்காலியில் சாய்ந்துகொண்டு, கால்மேல் காலைப் போட்டுக்கொண்டு, இந்தப் புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டால் போதும்.

இலங்கையையும் சேய்நாடாகிய யாழ்ப்பாணத்தையும், சுற்றிப் பார்க்கலாம். அங்குள்ள தலைவர்களுக்குச் 'சமுகம்' கொடுக்கலாம். அவர்களுடைய தமிழ் மணம் கமழும் புகை மணத்தை நுகரலாம்.

அடடே ! நீங்கள்தான் ஏற்கெனவே புத்தகத்தைக் கையிலெடுத்து விட்டீர்களே. நான் ஏன் குறுக்கே நிற்கவேண்டும் ?

1—1—'54
தி. நகரம்

பழ. சிதம்பரன்,
உரிமையாளர், பாரதி பதிப்பகம்.

# இலங்கையில் ஒரு வாரம்

தமிழ் நாட்டுக்கு மாபெரும் தொண்டு செய்ய வேண்டும் என்ற ஆசை என் உள்ளத்தில் துடித்துக் கொண்டிருந்தது ; என் இரத்தத்தில் கொதித்துக் கொண்டிருந்தது ; என் இருதயமாகிற வெளியில் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது.

சென்ற ஆகஸ்டு மாதத்தில் திடீரென்று அந்த ஆசை பொங்கிப் பெருகிவிட்டது. " எனக்கு ஏதாவது போக்குக் காட்டாவிட்டால் பூகம்பம், பெரு வெள்ளம் முதலிய உற்பாதங்களாக உருவெடுப்பேன் !" என்று பயமுறுத்திற்று. அஸ்ஸாமிலும் உத்தரப் பிரதேசத்திலும் இப்படி யாரோ தேசத் தொண்டு செய்யும் ஆர்வத்தை அமுக்கி வைத்ததினாலேயே அங்கெல்லாம் மேற்கூறிய உற்பாதங்கள் நேர்ந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் என்ன ? ஆனால் நான் அத்தகைய தவறு எதுவும் செய்யவில்லை ; அதாவது தேசத் தொண்டு செய்யும் ஆர்வத்தை அமுக்கிவிட

வில்லை. அந்த ஆர்வத்தை எப்படிவெளிப்படுத்துவது என்று யோசித்துப் பார்த்தேன். அதற்கு இரண்டே இரண்டு வழிகள்தான் என் முன்னால் தென்பட்டன.

ஒன்று, காங்கிரஸ் மகா சபையின் அக்கிராசனப் பதவிக்குத் தேர்தலுக்கு நிற்கவேண்டும்; அல்லது குறைந்த பட்சமாக, மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பதவிக்காவது நின்று தொலைக்க வேண்டும்! இது ஒரு வழி.

ஆனால் இந்த வழியில் சிறிது புகுந்துபார்த்ததில் எத்தனை எத்தனையோ தடைகள் மலைபோலக் குறுக்கிட்டது. இந்த வழியில் தொண்டு செய்ய வேண்டுமென்ற ஆசை எனக்கு முன்னதாகவே பலருக்கு ஏற்பட்டிருந்தது என்பதை நன்கு அறிந்தேன். அவர்கள் வெகுதூரம் முன்னேறி என்னைப் போன்றவர்கள் அந்த வழியில் பிரவேசிப்பதற்கே இடமில்லாமல் செய்து விட்டார்கள். அவர்கள் யார் யார் எனில், பொய், புளுகு, போர்ஜரி, கள்ளக் கையெழுத்து, கள்ளமார்க்கெட்டு, லஞ்சம், சிபார்சு—ஆகிய மகானுபாவர்கள் தான். அடிப்படையில் காங்கிரஸ் அங்கத்தினர் கையெழுத்து வாங்குவதிலிருந்தே அத்தகையோர் விடா முயற்சியுடன் வேலை செய்து வந்திருக்கிறார்கள். அத்தகைய அஸகாய சூரர்களுக்கு முன்னால் நாம் எங்கே? ஆகவே எனக்குத் தெரிந்திருந்த இரண்டாவது வழியைத்தான் நான் தேட வேண்டியதாயிற்று.

அந்த இரண்டாவது வழி, தமிழ்நாட்டிலிருந்து சில நாளைக்கு எங்கேயாவது போய்விட்டு வருவதே. தமிழ் நாட்டில் இப்போது தலைபோகிற பிரச்சனையாயிருப்பது உணவுப் பிரச்சனை; அதாவது உணவு



இல்லாத பிரச்சனை. உணவு இல்லாத கேடு காரணமாகச் சில ஸ்திரீகள் குழந்தைகளை விற்பதாகச் செய்திகள் வந்தன. இன்னும் சில தாய்மார்கள் வயிற்றில் உள்ள குழந்தைகளைக்கூட விலைகூறி விற்றுவிடுவதாகப் பிரசுரமாயிற்று. உணவு இல்லையென்று குழந்தைகளைப் பெற்றவர்கள் விற்றால் வாங்கிக் கொள்கிறவர்கள் அக் குழந்தைகளை என்ன செய்வார்கள் என்பது தெரியவில்லை. இப்படிப்பட்ட பயங்கரமான நிலைமையில் ஒருவர் ஒரு வார காலமாவது வெளிநாட்டுக்குச் சென்றுவிட்டு வந்தால் அந்த வரையில் உணவு நெருக்கடியைத் தீர்ப்பதற்கு உதவி செய்ததாகுமல்லவா? இப்படியே ஒவ்வொருவரும் செய்தால் அதாவது வெளிநாட்டுக்குப் போய் ஒருவார உணவை மீத்தால் நமது உணவு மந்திரி முன்ஷி மிகவும் குஷியடைந்து நம்மை வாழ்த்த மாட்டாரா? நாம் திரும்பி வரும்போது ஸ்ரீ ரோச் விக்டோரியா நமக்கு ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்துக் கொடுக்க மாட்டாரா?

எனவே,வெளிநாட்டுக்குப் போவதன்மூலம் தமிழ் நாட்டுக்குத் தொண்டு செய்வது என்று தீர்மானித்தேன். எந்த வெளி நாட்டுக்குப் போவது என்று யோசித்தபோது முதலில் கொரியா ஞாபகம் வந்தது. உடனே தளபதி மக் ஆர்தருக்கு ஒரு தந்தி கொடுத்தேன். "உதவிக்குப் புறப்பட்டு வரத் தயார்; உடனே ஒரு ஸூபர் போர்ட் பம்பர் விமானம் அனுப்பவும்" என்று. "விலாசதார் அகப்படவில்லை" என்று தந்தி திரும்பி வந்துவிட்டது! அடுத்தபடியாக நமது அண்டை நாடாகிய இலங்கையை நினைத்துக் கொண்டேன். இலங்கை மந்திரி ஒருவர் தமிழ் நாட்டின் கதியை நினைத்து உருகி, "பத்தாயிரம் டன் அரிசி

கடன் கொடுக்கிறேன் " என்று தெரிவித்திருந்தார். சில காலத்துக்கு முன்பு இலங்கை தனக்கு வேண்டிய அரிசிக்கு இந்தியாவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இப்போது சக்கரம் சுழன்று, இலங்கை இந்தியாவுக்கு அரிசி கடன் தருவதாகச் சொல்லுகிறது. இந்த அதிசயமான நிலைமையின் காரணத்தை அறிந்து கொள்ள வேண்டாமா? உண்மையாகவே மனமிரங்கி இலங்கை மந்திரிகள் அரிசி கொடுக்கிறார்களா? அல்லது " அழுகிய வாழைப் பழத்தை மாடுகூடத் தின்னவிட்டால் புரோகிதருக்குத் தானம் கொடுத்துவிடு!" என்று கோமுட்டி செட்டியார் கதையில் சொன்னாரே, அந்த மாதிரி இலங்கை சர்க்கார் சொல்லுகிறார்களா?

இதை நேரில் தெரிந்துகொண்டு வருவதற்காக இலங்கைக்குச் சமுகம் கொடுப்பது என்று தீர்மானித்தேன். (நாம் இங்கே " விஜயம் செய்தல் " என்று சொல்வதை நமது யாழ்ப்பாண சகோதரர்கள் சமுகம் கொடுத்தல் " என்று சொல்லுகிறார்கள்.) இலங்கை போவதற்கு இன்னும் சில முகாந்திரங்களும் எனக்குக் கிடைத்தன.

*1.* கொழும்பு தமிழ்ச் சங்கத்தார் தங்களுடைய எட்டாம் ஆண்டு விழாவில் வந்து கலந்து கொள்ள வேண்டும் என்று என்னைக் கேட்டிருந்தார்கள். அதற்குத் தேவையான போக்கு வரவு வசதிகளை 'ஒழுங்கு செய்து' தருவதாகவும் சொல்லியிருந்தார்கள்.

*2.* தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் அடுத்த ஆண்டு தமிழ்த் திருவிழாவை இலங்கையில் நடத்த வேண்டும் என்ற அழைப்பை ஒப்புக்கொண்டிருந்தார்கள். அவ்விதம் இலங்கையில் தமிழ் விழா நடத்துவதற்குப் பூர்வாங்க ஏற்பாடுகளை 'ஒழுங்கு செய்து' விட்டு வரும்படி ஸ்ரீ பெரியசாமித் தூரனையும் என்னையும் கேட்டுக் கொண்டார்கள்.



இவை எல்லாவற்றையும்விட முக்கியமான இன்னொரு காரணம் இருந்தது. பதினொரு வருஷத்துக்கு முன்னால் ஒரு தடவை நான் யாழ்ப்பாணம் சென்று திரும்பினேன். பிறகு எங்கெங்கே சென்றாலும், எந்தத் தமிழர் கூட்டத்தில் பேச நேர்ந்தாலும், ஒரு செய்தியைத் தவறாமல் சொல்லி வந்தேன். அது என்னவென்றால், " உண்மையான தமிழ் அன்பைக் காணவேண்டும் என்றால், யாழ்ப்பாணத்திலேதான் காண வேண்டும் " என்பது. பம்பாயிலும் கல்கத்தாவிலும் டில்லியிலும் இன்னும் தமிழ் நாட்டிற்குள் சென்ற சென்ற இடங்களிலெல்லாம் இதை நான் சொன்னதுண்டு. மற்ற இடங்களில் வசிக்கும் தமிழர்களிடம் தமிழ் அன்பு இல்லாமலில்லை. ஆனால், சில இடங்களில் உள்ள தமிழர்கள் தங்கள் தமிழ் அன்பை ஒளித்து வைத்துக் கொள்கிறார்கள். துப்பறியும் நிபுணர்களைக் கொண்டு அதைக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. இன்னும் சில இடங்களில் வெடிமருந்து வைத்துப் பாறையைப் பிளந்தால் தமிழன்பு சிறு ஊற்றாக மேலே வருகிறது. இன்னும் சில இடங்களில் தமிழ் அன்பு வேறு பாஷைகளின் மீது துவேஷமாகப் பரிணமித்துக் கோர தாண்டவம் செய்கிறது. ஆனால் யாழ்ப்பாணத்திலும் யாழ்ப்பாணத் தமிழர்கள் உள்ள இடங்களிலும் தமிழ் அன்பு வெளிப்படையாக அதனுடைய இனிமையான வடிவத்தில் பொங்கிப் பெருகுவதைக் காணலாம்.

இப்படியாகப் பதினெரு ஆண்டுகளுக்கு முன்பு பார்த்ததைக் கொண்டே சொல்லி வந்தேன். திடீரென்று சில நாளைக்கு முன் ஐயப்பாடு தோன்றி விட்டது. பத்து ஆண்டுகளுக்குள் உலகத்தில் எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்து விடுகின்றன. வாழ்க்கையிலும் பல மாறுதல்களைக் காண்கிறோம். பன்னிரண்டு வருஷத்துக்குள் புதுப்பிக்காவிட்டால் பதிவு செய்த பத்திரம் கூடக் 'காலாவதி' ஆகி விடுவதாகக் கேள்விப் பட்டிருக்கிறோம். அப்படி யிருக்க யாழ்ப்பாணத்தாரின் தமிழ் அன்பு மட்டும் ஒரு மாமாங்கம் ஆகியும் அப்படியே நிலைத்திருக்கும் என்பது என்ன நிச்சயம்? மறுபடியும் ஒரு தடவை போய்ப் பார்த்து விட்டு வந்தாலன்றி அதைப் பற்றி இனிக் கூட்டங்களில் சொல்லக்கூடாது. ஆனல் தமிழ்க் கூட்டங்களில் அதைப்பற்றிச் சொல்லக் கூடாது என்ருல் வேறு என்னத்தைச் சொல்வதற்கு இருக்கிறது?

எனவே, இலங்கைக்குச் சென்று யாழ்ப்பாணத் தமிழர்களுக்குச் 'சமுகம்' அளித்துவிட்டு வருவது என்று தீர்மானித்து, அதற்கு வேண்டிய ஒழுங்கு களைச் செய்ய ஆரம்பித்தேன்.

இலங்கைக்குப் போக ஒழுங்கு செய்வதென்பது சாமான்ய காரியம் அல்ல. பாஸ்போர்ட் வாங்க வேண்டும்; விஸா வாங்க வேண்டும். 'பாஸ்போர்ட்' டுக்கும் 'விஸா'வுக்கும் என்ன வித்தியாசம் என்பதைப் பற்றி ஆராய்ந்து மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டும். இன்னும், பண்டைக்காலத்தில் இலங் கையை வெற்றி கொள்ளச் சென்ற வீரத் தமிழர் களைப் போலவே உடம்பில் குத்துக் காயங்களுடன் புறப்பட வேண்டும். அம்மை ஊசி இரண்டு இடத்தில்



குத்திக் கொள்ள வேண்டும்; காலரா ஊசி இன்னும் இரண்டு இடத்தில் குத்திக்கொள்ள வேண்டும்.

அம்மை ஊசி என்னை அப்படி ஒன்றும் தொந்தரவு செய்துவிடவில்லை. இலேசாக விட்டு விட்டது. ஆனல் காலரா ஊசி குத்திக் கொண்ட அன்று கொஞ்சம் சுரம் வந்திருந்தது. ஊசி குத்திய டாக்டரை டெலிபோனில் அழைத்துச் "சுரம்வந்திருக் கிறது!" என்றேன். "சும்மா வரட்டும்; பரவா யில்லை!" என்ருர். "உமக்குப் பரவாயில்லை; எனக்குப் பரபரப்பா யிருக்கிறதே!" என்றேன். "அப்படித் தான் கொஞ்சம் பரபரப்பாயிருக்கும். காலரா ஊசியே அப்படித்தான். அதற்குக் கொஞ்சம் கூடப் புத்தியே இல்லை. தராதரம் தெரிவதில்லை. எழுத்தாளர்—பத்திராதிபர் என்று கூடப் பயப்படாமல் கொஞ்சம் தொந்தரவு கொடுக்கும். ஆனல் ஒரு நாளில் அது போய்விடும்!" என்ருர் டாக்டர்.

"அப்படியா செய்தி? இருக்கட்டும்! இந்தக் காலரா ஊசியைப் பற்றி ஒரு தடவை வெளுத்து வாங்கிவிட வேண்டியதுதான்!" என்று முடிவு செய்தேன்.

ஆனல் காலரா ஊசியினல் ஏற்பட்ட ஒரு நன்மை அதைப் பழி வாங்கும் எண்ணத்தை மாற்றிக் கொள்ளச் செய்தது.

சுரத்துடன் அறையில் படுத்திருந்தபோது வெளியில் யாரோ சிலர் வந்தார்கள். "கல்கி இருக் கிருரா?" என்று விசாரித்தது என் காதில் விழுந்தது. பதில் கூறிய பிள்ளை "இருக்கிருர்; ஆனல் அவருக்குக் காலரா இனகுலேஷன்......" என்று சொல்வதற்குள், வந்தவர்கள், "சரி, சரி! பிற்பாடு

வந்து பார்த்துக் கொள்கிறோம்" என்று சொல்லி விட்டு நடையைக் கட்டினார்கள். வந்தவர்கள் அவ்வளவு அவசரமாகத் திரும்பிச் சென்றதை அதற்கு முன் நான் அறிந்ததேயில்லை! "காலரா" என்ற வார்த்தை காதில் விழுந்ததுமே ஓட்டம் பிடித்தார்கள்!

இதையெல்லாம் இங்கே நான் விவரமாக எடுத்துக் கூறுவதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அது என்னவெனில், வருகிற 1951-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் தமிழ்நாட்டிலிருந்து தமிழன்பர்கள் பலர் இலங்கை போக வேண்டிய அவசியம் ஏற்படும். மதுரையிலும், திருவாரூரிலும், கோயமுத்தூரிலும் நடந்தது போன்ற மாபெரும் தமிழ்த் திருவிழா அடுத்த முறை யாழ்ப்பாணத்தில் நடைபெறவிருக்கிறது. அந்த விழாவுக்குப் போக விரும்பும் தமிழ் அன்பர்கள் இப்போது முதலே பிரயாண வசதிகளுக்கு ஒழுங்கு செய்யத் தொடங்குவது நலமாயிருக்கும்.

## 2

என் நண்பர் ஒருவரிடம் ஒரு சமயம் ஒரு பழைய கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். "1935-ம் வருஷத்தில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்கு மகாத்மா காந்தி வந்திருந்தார். அச்சமயம் நானும் அவ்விடம் போயிருந்தேன்......" என்று சொல்லத் தொடங்கினேன்.

உடனே நண்பர் குறுக்கிட்டு, "எந்த வருஷத்தில் போனீர்கள்? 1935-லா 1936-லா?" என்று கேட்டார்.



"1935-ல் தான்!" என்றேன்.

"எந்த மாதத்தில்?" என்றார்.

"நன்றாய் ஞாபகம் இல்லை. ஆகஸ்டு மாதமாயிருக்கலாம்."

"ஒரு வருஷம் ஆகஸ்டில் பெரு மழை பெய்தது. அந்த வருஷமா?"

"இருக்கலாம்."

"எந்த ஊருக்குப் போனீர்கள்? திருச்செங்கோட்டுக்கா?"

"ஆமாம்."

"திருச்செங்கோட்டுக்குப் போக எந்த ஸ்டேஷனுக்கு டிக்கெட் வாங்கினீர்கள்!"

"சங்கரி துர்க்கம் ஸ்டேஷனுக்கு!"

"அப்போதெல்லாம் ரயிலில் நீங்கள் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்வது வழக்கமா? இரண்டாம் வகுப்பிலா?"

"கிடைத்த வகுப்பில்!"

"சென்னையிலிருந்து சங்கரி துர்க்கத்துக்கு டிக்கெட் விகிதம் என்ன?"

"சுமார்......"

"சுமாராகத்தான் தெரியுமோ? நிச்சயமாய் தெரியாதாக்கும்?"

"தெரியாது."

"உங்கள் காதில் தோளை போட்ட அடையாளம் இருக்கிறதே! அப்போதெல்லாம் கடுக்கன் போட்டுக் கொள்வதுண்டோ?"

"இல்லை."

"அப்படித்தான் நினைத்தேன். ஏனென்றால் காதில் கடுக்கனோடு போனால் மகாத்மா கடுக்கனைக் கழற்றிக் கொடு என்று கேட்டுவிடலாம் அல்லவா? அதிருக்கட்டும்; யாரோ இங்கிலாந்தில் ஒரு வெள்ளைக்காரன் 'காதைக் குத்திக் கடுக்கன் போட்டால் கண்ணுக்கு நல்லது' என்று சொல்லியிருக்கிறானாமே? அதைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"சாதகமான அபிப்பிராயந்தான். காதைக் குத்தினால் கண்ணுக்கு நல்லது. கண்ணைக் குத்திக் கொண்டால் காதுக்கு ரொம்ப நல்லது......"

"அப்படித்தான் நானும் நினைத்தேன். இப்போதெல்லாம் வைரத்தின் விலை எப்படியிருக்கிறது; அதிகமா? குறைவா?"

மேற்படி நண்பரிடம் நான் சொல்ல ஆரம்பித்த விஷயத்தைச் சொல்லவே இல்லை! சொல்ல முடியவில்லை.

இலங்கைக்கு எந்தக் காரிய நிமித்தமாகவாவது போக விரும்பும் நண்பர்கள் ஆகாச விமான நிலயத்தில் சுகாதார அதிகாரிகளிடமும் சுங்கப் பரிசோதனை அதிகாரிகளிடமும் மேற்கண்டவாறு பல கேள்விகளுக்குப் பதில் சொல்லத் தயாராயிருக்க வேண்டும்.

சுகாதார அதிகாரி உங்களை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, கையில் உள்ள அச்சுப் பாரத்தையும் ஏற இறங்கப் பார்ப்பார்.

பிறகு, "உங்களுக்கு வைசூரி உண்டா?" என்று கேட்பார்.

"இல்லை."

"பிளேக்?"



"இல்லை."

"காலரா?"

"அதுவும் இல்லை."

"டைபாய்ட், நிமோனியா, டபிள் நிமோனியா, காக்கை வலிப்பு, முடக்கு வாதம், குன்மம்......?"

"இவை ஒன்றும் இல்லை."

சுகாதார அதிகாரியின் முகத்திலிருந்து சோக ரஸம் சொட்டும். பிறகு உங்கள் கையைப் பிடித்து நாடி பார்த்துக் கொண்டே, "சுரம், கிரம் ஏதாவது இருக்கிறதா!" என்று கேட்பார்.

"சுரம் ஒன்றும் இல்லை. கிரம் ஏதாவது இருக்கிறதா என்று கையைப் பிடித்துப் பார்த்த நீங்கள் தான் சொல்லவேண்டும்."

இல்லை என்பதற்கு அறிகுறியாக உத்தியோகஸ்தர் தலையை ஆட்டிவிட்டு, "ஒக்கே! "போகலாம்!" என்பார்.

இத்தனை கேள்வி கேட்ட டாக்டர் "ஆஸ்த்மா உண்டா?" என்று மட்டும் என்னைக் கேட்கவில்லை. துரதிர்ஷ்டத்தைப் பாருங்கள்! அவ்விதம் கேட்டிருந்தால் உடனே, "உண்டு! திவ்யமாய் உண்டு!" என்று அந்த டாக்டருக்குப் பதில் சொல்லியிருப்பேன் அல்லவா?

சுகாதார அதிகாரியிடமிருந்து சுங்க அதிகாரியிடம் போகவேண்டும்.

சுங்க அதிகாரி உங்கள் பெட்டிகளையும் படுக்கைகளையும் திறந்து காட்டச் சொல்வார். வாயைத் திறந்து காட்டச் சொல்வார். வயிற்றைத் திறந்து காட்டச் சொல்வார். சட்டைப் பைகளை உதறிக் காட்டச் சொல்வார்.

எல்லாவற்றையும் பார்த்த பிறகு "ஏதாவது பட்டு கிட்டு எடுத்துப் போகிறீர்களா?" என்று கேட்பார்.

"இல்லை."

"துணிமணி?"

"இல்லை. இலங்கையில் நிர்வாணம் அடைய எண்ணிப் போகிறோம்."

"தங்கம் ஏதாவது இருக்கிறதா?"

"இல்லை; இருந்தாலும் கொடுக்கும் உத்தேச மில்லை.

"வைரம்? வைடூரியம்? கோமேதகம்? புஷ்ப ராகம்? ரத்தினம்? முத்து? பவழம்?"

"இல்லை!"

"புகையிலை? கஸ்தூரி? கோரோசனை? குங்குமப் பூ?"

"ஒன்றும் இல்லை!"

சுங்க அதிகாரி மிக்க அதிருப்தி அடைந்து சந்தேகக் கண்ணுடன் உங்களை மேலும் கீழும் பார்ப்பார்.

"ஓக்கே! போகலாம்!" என்று சொல்லி அடுத்த ஆளைக் கூப்பிடுவார்.

அப்புறம் போலீஸ் அதிகாரியிடம் போக வேண்டும்.

"எங்கே போகிறீர்?"

"இலங்கைக்கு!"

"இலங்கைக்கா? சிலோனுக்கா?"

"சிலோனுக்கு!"

"சிலோனுக்கு எதற்காக?"



"சிலோனைச் சுருட்டி எடுத்துக்கொண்டு வருவதற்கு!"

"வந்து?"

"விரித்துக்கொண்டு படுப்பதற்கு."

"சரி! நீர் எந்த வருஷம் பிறந்தீர்?"

"1953-ல்."

"எங்கே பிறந்தீர்?"

"ஒரு இருட்டறையில்!"

"சாட்சி உண்டா?"

"கிடையாது."

"அது வருந்தத் தக்கது. நீர் எப்போது இறந்தீர்?"

"1950-ல்

"எங்கே!"

"காஷ்மீரில் நடந்த விமான விபத்தில்!"

"பிறகு இங்கு எப்படி வந்தீர்!"

"இந்திய சர்க்கார் விமான விபத்தைப் பற்றி விசாரிக்கக் கமிஷன் ஒன்று நியமித்தார்கள். கமிஷன் விசாரித்து 'விபத்து நேரிடவில்லை' என்று முடிவு செய்தது. நானும் அந்த முடிவை ஒப்புக் கொண்டேன். துண்டு துண்டாய்க் கிடந்த என் உடம்பெல்லாம் ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொண்டு உயிர் பெற்று எழுந்தது. பிறகு இங்கே வந்தேன்."

"ரொம்ப வருந்தத் தக்க விஷயம். ஓக்கே! நீர் போகலாம்."

இப்படியாகப் பலவிதச் சோதனைகளுக்கு உள்ளான பிறகு ஆகாச விமானத்துக்குச் சென்றோம். எங்களை இலங்கைக்கு ஏற்றிச் செல்வதற்காகக் காத்

திருந்த விமானத்தின் முன் பகுதியில் "சீதா தேவி" என்று எழுதியிருந்தது. விமானத்தின் பெயர் அதுவென்று தெரிந்தது. இதுபற்றி நண்பர் ஸ்ரீ பெரியசாமித் தூரன் அவர்களுக்கு மிகவும் சந்தோஷம்,

"முன் காலத்தில் அன்னை சீதா தேவியைக் கண்டுபிடித்து வருவதற்காக அனுமார் ஆகாச மார்க்கமாய் இலங்கைக்குச் சென்றார். இப்போது அதற்குப் பதிலாக அன்னை சீதா தேவி குழந்தைகளாகிய நம்மை இலங்கைக்குக் கொண்டுபோகிறார்!" என்று சொல்லிச் சொல்லி ஆனந்தப்பட்டார்.

விமானத்துக்கு அனுமார் என்று பெயர் வைக்காமல் "சீதா தேவி" என்று பெயர் வைத்ததில் எனக்கும் சந்தோஷந்தான். சென்னை சர்க்கார் மந்திரிகள் ஆகாயப் பிரயாணம் செய்வதற்காக ஒரு விமானம் வாங்கினார்கள். அதற்கு "அனுமார்" என்று பெயர் வைத்தார்கள். அனுமார் தமது சுபாவத்தை அடிக்கடி காட்டிக் கொண்டிருந்தார். ஒரு சமயம் 'அனுமார்' மீது ஏறிச் சென்னை மந்திரிகள் டில்லிக்குப் போனார்கள். வழியில் ஒரு கிராமத்தில் சில பக்தர்கள் ராம பஜனை செய்துகொண்டிருந்தார்கள். அனுமார் காதில் அது விழுந்து விடவே, திடீரென்று முன்னெச்சரிக்கையில்லாமல் கீழே ஒரு மைதானத்தில் இறங்கிவிட்டார். அப்புறம் அங்கிருந்து புறப்படவும் மறுத்துவிட்டார். சென்னை மந்திரிகள் திண்டாடித் திணறி, பிழைத்தது புனர் ஜன்மம் என்ற எண்ணத்துடன், கால்நடையாகவும் கட்டை வண்டியிலும் சென்று ரயில் ஏறி டில்லி போய்ச்சேர்ந்தார்கள்.



கருணை மிக்க சீதாதேவி அப்படியெல்லாம் எங்களைப் பாடாய்ப் படுத்தாமல் பத்திரமாய் யாழ்ப்பாணத்தில் கொண்டுபோய் இறக்கினார். அங்கேயுள்ள சுங்க அதிகாரிகள், சுகாதார அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள் முதலியவர்களிடம் நாக்கல் கொடுத்துவிட்டு, விமான நிலையத்திற்கு வந்திருந்த யாழ்ப்பாணத்துத் தமிழ் அன்பர்களிடம் சற்றுத் தூரத்திலிருந்தபடியே அளவளாவிப் பேசிவிட்டு மறுபடியும் புறப்பட்டோம். அந்த மரகதத் தீவின் இயற்கைவளங்களை மேலிருந்து பார்த்துக்கொண்டே, கொழும்பு போய்ச் சேர்ந்தோம். தமிழ்ச் சங்கத்து நண்பர்கள் ஏற்பாடுசெய்திருந்தபடி கொழும்பு நகரில் டாக்டர் நெல்லைநாதன் அவர்களுடைய இல்லத்தில் தங்கினோம்.

* * *

கொழும்பில் முதன் முதலாக நான் விசாரித்த விஷயம் அங்கே உணவு நிலைமை எப்படி என்பது தான். சில வருஷங்களுக்கு முன்னால் இலங்கையில் உணவுத் தட்டுப்பாட்டைக் குறித்து அடிக்கடி செய்தி வருவதுண்டு. இந்தியாவிலிருந்து அரிசி அனுப்பி வைப்பதற்குத் தூது கோஷ்டிகளும் இங்கே வந்ததுண்டு. அப்படியிருக்க, தற்போது இலங்கை இந்தியாவுக்கு அரிசி கடன் கொடுப்பதாக முன் வருவது எவ்வாறு சாத்தியமாயிற்று?

இலங்கையின் நிலப்பரப்பை எண்ணும்போது ஜனத்தொகை அதிகம் என்று சொல்லமுடியாது. தமிழ் நாட்டில் மூன்று ஜில்லாக்களின் பரப்புக் கொண்டது இலங்கை. வாழ்கின்ற மக்கள் சுமார் 67 லட்சம் பேர்தான். ஆயினும் இலங்கை பற்றுக்

குறை நாடாகவே இருந்து வருகிறது. இலங்கை மக்களுக்குப் போதுமான உணவுப் பொருள் இலங்கையில் விளைவதில்லை. சமீபகாலத்தில் விளைவிக்க முடியும் என்று எதிர்பார்க்கவில்லை.

இந்த நிலைமையில் இலங்கையில் தற்சமயம் உணவுத் தட்டுப்பாடு கிடையாது. எல்லா மக்களுக்கும் பசி தீர உண்பதற்கு வேண்டிய உணவு கிடைத்து வருகிறது. அதுமட்டுமல்ல; அரிசி கடன் கொடுப்பதற்கு வேண்டிய வசதியும் இருக்கிறது.

இவ்வளவு திருப்திகரமான நிலைமை இலங்கையில் தற்சமயம் குடி கொண்டிருப்பதற்குக் காரணங்கள் என்னவென்று விசாரித்துப்பார்த்தபோது பின்வரும் காரணங்கள் தெரிந்தன :—

**1.** உணவுத் திட்டத்தை முன் ஜாக்கிரதையுடன் சரியாக வகுத்து அமுல் நடத்துகிறார்கள். உணவுத் தேவை இவ்வளவுதான் என்பதைச் சரியாக நிர்ணயித்துக் கொண்டு, அதில் பற்றாக் குறைக்குப் பர்மாவிலிருந்து அரிசியும் ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை மாவும் தருவித்துக் கொள்கிறார்கள். உணவுப் பங்கீடு முறை புகாருக்கு இடமின்றிச் சரிவர அமுல் நடத்தப்பட்டு வருகிறது. இது குறித்து இலங்கை அரசாங்கத்தை நாம் கட்டாயம்பாராட்டியே தீரவேண்டும்.

உணவு இலாகா இவ்வளவு திறமையுடன் நிர்வகிக்கப்பட்டு வருவதற்குப் பொறுப்பாளியான அதிகாரி ஸ்ரீ ஆள்வாப் பிள்ளை என்னும் தமிழர்தான் என்று அறிந்தபோது எனக்கு இரு மடங்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இலங்கையில் நான் சந்தித்துப்



பேசிய நண்பர்களில் ஸ்ரீ ஆள்வாப்பிள்ளை அவர்களின் திறமையைப் பாராட்டாதவர் யாரும் இல்லை என்றே சொல்லலாம்.

**2.** இலங்கை வாசிகள். (சிங்களவர், இந்தியர்கள், தமிழர்கள் அனைவரும்) அரிசியின் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெற்றிருக்கிறார்கள். 'அரிசியே கதி—அரிசிச் சோறு இல்லாவிட்டால் உயிர் வாழ முடியாது' என்ற மனப்பான்மை இலங்கையில் கிடையாது. ஆஸ்திரேலியாவிலிருந்து வரும் கோதுமை மாவைக்கொண்டு நல்ல முறையில் உயர்ந்த ரகமான ரொட்டி (*Baker's Bread*) இலங்கையில் எங்கும் செய்யப்படுகிறது. ரொட்டிக் கிடங்குகள் (*Bakery*) எங்கெங்கும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இலங்கையில் சாதாரணக் கடையில் வாங்கும் ரொட்டி சென்னையில் ஸ்பென்ஸர் கம்பெனியில் வாங்கும் ரொட்டியை விட மேலாயிருக்கிறது. எல்லோரும் ரொட்டி சாப்பிடப் பழகிக் கொண்டிருக்கிறார்கள்.

வாரத்துக்கு ஒரு படி அரிசிதான் ஒவ்வொருவருக்கும் ரேஷன். இந்த ஒரு படி அரிசியின் விலை ஆறணாத்தான். ஒரு படி அரிசியோடு ரொட்டி, கறிகாய்கள், கிழங்குகளைக்கொண்டு திருப்தியாகச் சாப்பாடு நடந்துவிடுகிறது.

அதிகப்படியாக அரிசி வேண்டுகிறவர்கள் பகிரங்கமாக வேறு கடைகளில் வாங்கிக்கொள்ளலாம். இலங்கையில் விளையும் அரிசிக்குக் கட்டுப்பாடு இல்லை. விலை நிர்ணயமும் இல்லை. ஒரு படி இலங்கை அரிசியின் விலை சுமார் ஒரு ரூபாய். ஆகையால் அதிகம் பேர் இந்த விலைக்கு இலங்கை அரிசி வாங்குவதில்லை.

ரேஷன் கடை அரசியைப் பர்மாவிலிருந்து இலங்கை சர்க்கார் தருவிக்கிறார்கள். வாங்கிய விலையைக் காட்டிலும் மிகக்குறைந்த விலைக்கே கொடுக்கிறார்கள். இதில் ஏற்படும் வித்தியாசத்துக்கு இலங்கை சர்க்கார் உதவிப்பணம் (*Subsidy*) கொடுத்து உதவுகிறார்கள். அதாவது நஷ்டத்தைச் சர்க்கார் கணக்கில் எழுதிவிடுகிறார்கள். இந்த நஷ்டத்தைப் பொறுத்துக்கொள்ளும் பண வசதி இலங்கை சர்க்காருக்கு இருக்கிறது.

3. இலங்கை சர்க்கார் இலங்கையின் உணவுத் தேவையைப் பூர்த்தி செய்யப் பர்மாவிலிருந்து அரிசியும் ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை மாவும் தருவிக்கிறார்கள். இதற்காக அந்த நாடுகளுக்கு இலங்கை சர்க்கார் பணம் அனுப்புவது அவசியம் அல்லவா?

இந்தியாவில் நாம் வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள் தருவிப்பதை நிறுத்தப் பார்க்கிறோம். வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள் தருவித்து அதற்காகப் பணம் அனுப்பினால் இந்தியாவின் பொருளாதார நிலையை அது பாதிக்கிறது. ஆகையால் உணவு இறக்குமதியை நிறுத்த வேண்டும் என்று நமது தலைவர்கள் சொல்கிறார்கள்.

ஆனால் இந்த மாதிரிக் கவலை இலங்கை சர்க்காருக்குக் கிடையாது. இலங்கையிலிருந்து தேயிலையும், ரப்பரும் ஏராளமாக அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. இதற்காக அயல் நாடுகளிலிருந்து ஏராளமான பணம் இலங்கைக்கு வரவேண்டியதாயிருக்கிறது. இப்படி வரவேண்டிய தொகையில் ஒரு பகுதியை அரிசியும் கோதுமை மாவும் தருவித்துக்



கொள்ள உபயோகப் படுத்துகிறார்கள். இதனால் இலங்கை சர்க்காரின் பொருளாதார நிலைமை பாதிக்கப் படுவதில்லை.

அரிசியும் கோதுமை மாவும் தேவைக்குக் கொஞ்சம் அதிகமாகவே, தருவித்து வைத்திருக்கிறார்கள். எனவே, பத்தாயிரம் டன் அரிசி இப்போது கடன் கொடுத்துப் பிறகு திரும்பப் பெற்றுக் கொள்வதில் இலங்கை சர்க்காருக்கு யாதொரு கஷ்டமும் இல்லை. ஒரு வேளை கொஞ்சம் சௌகரியங்கூட இருக்கலாம்.

"இந்தியாவில் பஞ்சம் தாண்டவமாடியபோது நாங்கள்தானே உதவி செய்தோம்? இங்கே நீங்கள் கொஞ்சங்கூட நன்றியில்லாமல் எதிர்க்கிறீர்களே?" என்று இலங்கையிலுள்ள ஏழரை லட்சம் ஏழை இந்தியத் தொழிலாளிகளுக்கு எடுத்துச் சொல்லலாம். "உங்களுடைய தலைவர்களைத் துறத்திவிட்டு எங்களையே தலைவர்களாக வைத்துக் கொள்ளுங்கள்!" என்றும் சொல்லலாம். யார் கேட்பது?

* * *

ஏழரை லட்சம் ஏழை இந்தியத் தொழிலாளர் என்று சொன்னதும், முக்கியமான ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது.

இலங்கை இன்று இவ்வளவு செல்வத்தில் சிறந்த நாடாயிருப்பதற்குக் காரணமானவர்கள் யார்? இலங்கையின் செல்வத்துக்கு அடிப்படை என்ன? பர்மாவிலிருந்தும், ஆஸ்திரேலியாவிலிருந்தும் தருவிக்கும் உணவுப் பொருளுக்கு அலட்சியமாகப் பணம் கொடுக்கக்கூடிய நிலைமையில் இன்று இலங்கை எதனால் இருக்கிறது?

இலங்கையின் செல்வச் செழிப்புக்குக் காரணம் அதன் வியாபாரப் பெருக்கம். இலங்கையின் வியாபாரப் பெருக்கத்துக்குக் காரணம்தேயிலேயும் ரப்பரும். தேயிலே-ரப்பர்த் தோட்டங்களில் ஆதிநாளிலிருந்து உழைத்துப் பாடுபட்டு வளர்த்தவர்கள் இந்தியாவிலிருந்து, முக்கியமாகத் தமிழ் நாட்டிலிருந்து இலங்கைக்குச் சென்றுள்ள தொழிலாளிகள்.

தேயிலேயும் ரப்பரும் இலங்கையில் நிரம்ப உற்பத்தியாகிறது. பல தேசங்களுக்கும் போகிறது. அவற்றுக்கு நல்ல விலேயும் கிடைக்கிறது. ஆகையால், ஸ்டர்லிங்—டாலர் நாணயங்களில் இலங்கைக்குப் பணம் வரவேண்டியதாகிறது. அந்தப் பணத்தில் ஒரு பகுதியைக் கொண்டு அரிசியும் கோதுமை மாவும் வேண்டிய அளவு தருவிக்க முடிகிறது.

இந்தச் சுபிட்சமான நிலேமைக்கு ஆதிகாரணமானவர்களும், இன்று காரணமா யிருப்பவர்களும் ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளர்கள்தான்.

இலங்கையில் முன் தலேமுறைகளில் வேலே செய்யப் போனவர்களும் அவர்களுடைய சந்ததிகளுமான இன்று ஏழரை லட்சம் தமிழ் நாட்டுத் தொழிலாளிகள் இலங்கையில் இருக்கிறார்கள். இவர்களேப் பின் தொடர்ந்து சென்று வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டவர்கள் ஒரு லட்சம் பேர் இருக்கிறார்கள்.

இந்த ஏழரை லட்சம் இந்தியர்களே—பெரும்பாலும் தமிழர்களே — அங்கிருந்து கிளப்பிவிட இலங்கை சர்க்காரின் மந்திரிகள் பலவித உபாயங்களேக் கையாண்டு வருகிறார்கள். பற்பல சூழ்ச்சித் திட்டங்கள் வகுக்கிறார்கள்.



முக்கியமாக இந்தியர்களுடைய பிரஜா உரிமையையும் வோட்டுரிமையையும் பறித்துவிடக் கூடிய சட்டங்களேச் செய்திருக்கிறார்கள்.

இத்தனே வருஷங்கள் இலங்கையில் தொடர்ந்து வசித்தவர்களுக்கு மட்டுமே இலங்கையில் பிரஜா உரிமை உண்டென்றும், அதற்கு அவர்கள் அத்தாட்சி காட்டி ருசுப் படுத்தவேண்டும் என்றும் விதித்திருக்கிறார்கள்.

இந்தக் கடுமையான சட்டத்தின்படியும் இலங்கையின் பிரஜாவுரிமை பெறக்கூடிய இந்தியர்கள் லட்சக் கணக்கானவர்கள் உண்டு. ஆனால் அதற்குரிய தஸ்தாவேஜுகளேத் தேடிக் கண்டு பிடித்துக்கொண்டு வந்து கொடுத்துப் பதிவு செய்து கொள்வதென்பது பெரும்பான்மை எழுதப் படிக்கத் தெரியாத ஏழைத் தொழிலாளர்களுக்கு அசாத்தியமான காரியம்.

படிக்கத் தெரிந்தவர்களும் உலகம் அறிந்தவர்களுமான மனிதர்களுக்குத் தற்காலிகமாக இலங்கை போய்விட்டு வருவதற்குரிய பாத்திரங்களேப் பூர்த்தி செய்து, அதிகாரிகள் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் சொல்லி, நிபந்தனேகளே நிறைவேற்றிவிட்டுப் போய் வருவது பிரம்மப் பிரயத்தனமாயிருக்கிறது.

எழுதப் படிக்கத் தெரியாத தோட்டத் தொழிலாளி ஒருவர் தம்மை இலங்கைப் பிரஜையாகப் பதிவு செய்து கொள்வதற்காகப் பூர்த்தி செய்யவேண்டிய பாரங்களேப் பார்த்தால் நாம் மூர்ச்சை போட்டு விழுந்துவிடுவோம். அதற்குரிய

இதர தஸ்தவேஜுகளைக் கொண்டு வரும்படி சொன்னால் "வேண்டாம்! வேண்டாம்! எங்களுக்குப் பிரஜா உரிமையே வேண்டாம்! சும்மா விட்டால் போதும்!" என்று கதறுவோம்.

அவ்வளவு பயங்கரமான சோதனையை இந்தியத் தொழிலாளிகளுக்கு இலங்கை சர்க்கார் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

அந்தச் சோதனையில் அவர்கள் தேறுவதற்காகப் பெருமுயற்சி புரிந்துவரும் சில தலைவர்களை இலங்கையிலுள்ள இந்திய மக்கள் பெற்றிருக்கிறார்கள். இது அவர்களுடைய பாக்கியம்.

இத்தகைய இந்தியத் தலைவர்களில் சிலரை இலங்கையில் நான் சந்தித்தேன். ஸ்ரீ ராஜ்லிங்கம் ஸ்ரீ தொன்டைமான் குமாரவேல், ஸ்ரீ சுப்பையா, சோமசுந்தரம், ஜனாப் ஆஸீஸ் ஆகியவர்களைப் பார்த்துப் பேசினேன்.

ஏழரை லட்சம் இந்தியத் தொழிலாளிகள் பிறப்புரிமை, வோட்டுரிமை உள்பட எல்லா உரிமைகளையும் இழந்து அடியோடு சர்வ நாசம் அடையாமல் தடுத்துக்கொண்டு நிற்பவர்கள் இந்த ஒரு சில இந்தியத் தலைவர்கள்தான்.

சில நாளைக்கு முன்பு இலங்கை மந்திரிகளில் ஒருவரான ஸ்ரீ குணசிங்கா என்பவர் இந்தத் தலைவர்களைப் பற்றிப் பேசியது பத்திரிகைகளில் வெளியாகியிருந்தது.

"இந்தியத் தொழிலாளிகளே! ராஜலிங்கத்தையும், தொண்டைமானையும், சுப்பையாவையும் நம்பாதீர்கள். அவர்களை நம்பினால் அழிந்து போவீர்கள். அவர்களுடைய திட்டம் எதுவும்



உருப்படாது!" என்று ஸ்ரீ குணசிங்கா எச்சரித்திருக்கிறார்.

ஒரு ராஜலிங்கமும், ஒரு தொண்டைமானும் ஒரு சுப்பையாவும் இல்லாமற் போயிருந்தால் இலங்கையின் சகல வளங்களுக்கும் காரணமான ஏழரை லட்சம் தமிழர்களை இலங்கை சர்க்கார் ஓட்டைக் கப்பலில் ஏற்றிக் கடலிலே விட்டிருப்பார்கள்.

ஸ்ரீ ராஜலிங்கத்துக்கும் ஸ்ரீ தொண்டைமானுக்கும் ஸ்ரீ சுப்பையாவுக்கும் மற்றும் அவர்களுடைய சகாக்களுக்கும் ஏழரை லட்சம் தோட்டத் தொழிலாளர் மட்டுமின்றித் தமிழ்நாடே மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.

## 3

"தமிழ் மணம் கமழ வேண்டும்" என்று மணி ரங்கு ராகத்தில் கீர்த்தனம் பாடுகிறார்களே, உண்மையில் தமிழுக்கு என்று ஒரு தனி மணம் உண்டா என்று கேட்டால், கட்டாயம் உண்டு என்று நான் தயங்காது சொல்வேன். தமிழ் மணம் என்பது புகையிலைச் சுருட்டைப் புகைக்கும்போது உண்டாகும் மணமாகவே இருக்கவேண்டும். யாழ்ப்பாணத் தமிழர்களோடு பழக நேர்ந்தவர்கள் யாரும் இதை எளிதில் கண்டுகொள்வார்கள்.

யாழ்ப்பாணத்துத் தமிழர்கள் இருக்கிறார்களே, அவர்களுடைய வாய்கள் சிறிது நேரம்கூடச் சும்மா இருப்பதில்லை. ஒன்று அவை அழகிய தமிழில் கதைத்துக் கொண்டிருக்கும்; அல்லது நறுமணச் சுருட்டைப் புகைத்துக் கொண்டிருக்கும். அவர்கள்

பேசும் தமிழில் இனிய புகை மணம் கமழும் என்பதைப் பற்றி எள்ளளவும் ஐயமில்லை.

இப்படிப்பட்ட யாழ்ப்பாணத் தமிழர்களில்—தமிழர் தலைவர்களில்—பேராசிரியர் அருள்நந்தி ஒருவர். கொழும்பு தமிழ்ச் சங்கம் ஆரம்பித்த நாளிலிருந்து இவர்தான் அச் சங்கத்தின் தலைவர். இவர் முன்னாளில் இலங்கை அரசாங்கக் கல்வி இலாகாவில் உத்தியோகம் பார்த்தார். டிபுடி டைரக்டர் என்ற பதவி வரைக்கும் வந்தார். அதற்கு மேலே நியாயமாக டைரக்டர் பதவிக்கும் இவர் வந்திருக்கவேண்டும். ஆனால் இலங்கை சிங்கள சர்க்காரின் வேற்றுமைக் கொள்கை அதற்குக் குறுக்கே வழி மறைத்து நின்றது. நல்ல வேளையாக இச் சமயத்தில் இலங்கையைச் சுதந்திரம் தேடிக் கொண்டு வந்தது. காந்தி மகானுடைய தவத்தினால் இந்தியாவுக்கு வந்த சுதந்திரம் இந்தியாவோடு நின்று விடவில்லை. கடல் கடந்து இலங்கைக்கும் சென்றது. பர்மாவுக்கும் ஜாவா—சுமத்ராவுக்கும்கூட அல்லவா அதிர்ஷ்டம் அடித்திருக்கிறது!

இலங்கைக்குச் சுதந்திரம் வந்தபோது சிங்கள மந்திரிகள் அதுவரை அரசாங்க உத்தியோகத்திலிருந்தவர்களுக்குச் சுதந்திரம் அளிக்க முன் வந்தார்கள்! "உபகாரச் சம்பளத்துடன் விலகிக் கொள்ள விரும்புகிறவர்கள் விலகிக்கொள்ளலாம்" என்றார்கள். அச் சமயம் பார்த்து உத்தியோக விலங்கை உடைத்துக்கொண்டு வெளியேறியவர்களில் ஸ்ரீ அருள்நந்தி ஒருவர். தற்சமயம் இலங்கை சர்வகலாசாலையில் தத்துவப் போதகராயிருந்து வருகிறார்.



பேராசிரியர் அருள்நந்தி அவர்களை அறிவுக் களஞ்சியம் என்று கூறுவது மிகையாகாது. நவீன மேனாட்டுக் கல்வியில் தலை சிறந்த தேர்ச்சி பெற்றிருப்பதுடன் பழந்தமிழ் நூல்களை நன்கு ஆராய்ந்து கற்றவர். எவ்வளவுக்குப் படித்தவரோ, அவ்வளவுக்கும் அடக்கம் வாய்ந்தவர். "நிறைகுடம் தளும்பாது" என்பதற்கு ஸ்ரீ அருள்நந்தி பிரத்தட்ச உதாரணமாவார். இவ்வளவு அடக்கம் வாய்ந்தவராயினும் அவருடைய உள்ளத்தில் பொங்கும் தமிழன்பை வெளியிடச் சந்தர்ப்பம் நேரும்போது அவருடைய அடக்கம் பறந்துவிடுகிறது. கொழும்பு சங்க விழா இரண்டு தினங்கள் நடந்து முடியப் போகும் தருவாயில் இவர் சில வார்த்தைகள் கூறினார். "இளம் பிராயத்தில் நான் கவி பாடினேன். அதைக் கேளுங்கள்!" என்று ஆரம்பித்தார். கவி என்ன என்பது எனக்கு ஞாபகம் இல்லை. அதன் கருத்தை மட்டும் சொல்லுகிறேன்.

ஸ்ரீ அருள்நந்தி இந்த உலக வாழ்க்கையிலுள்ள துன்பங்களைக் கண்டு கலங்கினாராம். மும் மலங்களுக்கு இடமாகிய இந்தப் பிறவியை எதற்காக அளித்தாய் என்று இறைவனிடம் முறையிட்டாராம். எப்படியாவது இந்த மானிட வாழ்க்கையிலிருந்து தம்மைத் தப்புவித்துக்கரை சேர்க்கும்படி கடவுளிடம் மன்றாடிக் கொண்டிருந்தாராம். அச்சமயத்தில் ஒரு கன்னியைச் சந்திக்க நேர்ந்து அவள் பேரில் மோகம் கொண்டாராம். உடனே அவருடைய மனப்பான்மை அடியோடு மாறிப் போய் விட்டதாம்! "தமிழணங்கே! உன்னுடைய காதலின் இன்பத்தை அனுபவிப்பதற்காக இந்தக் கொடிய மும்மலங்களுக்கு இடமாகிய

மனிதப் பிறவியைக்கூட நான் சகித்துக் கொள்ளச் சித்தமாயிருக்கிறேன் !" என்று சொன்னாராம்.

தெய்வத் தமிழ் மொழியின் பேரில் ஸ்ரீ அருள் நந்திக்கு அவ்வளவு மோகம். கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசி வித்வான் கனகசுந்தரம் அவர்களுக்கோ தமிழில் மோகம் என்பது மட்டுமல்ல அதன் காரணமாகப் பலர் மீது கோபம். தமிழைக் குறைத்துச் சொல்லுகிறவர்களின்மீது கோபம். தமிழ்ச் சங்க விழாவுக்கு முட்டுக்கட்டை போட்டதாக அவருக்குத் தோன்றியவர்கள் மீது கோபம். எதிர் பார்த்த அளவு அவருடன் ஒத்துழைத்துத் தமிழ்ப் பணிசெய்யாதவர்களின் மீது கோபம். இவை எல்லாவற்றையும்விட இலங்கைக்குத் தமிழர்கள் புதிதாக வந்தவர்கள் என்று சொல்கிறார்களே, அவர்கள்மீது அவருக்கு மெத்தக் கோபம்.

"தமிழர்களா புதிதாக இலங்கைக்கு வந்து குடியேறியவர்கள்? ஒரு நாளும் இல்லை. சிங்களவர்கள் தான் அஸ்ஸாமிலிருந்தோ, வங்காளத்திலிருந்தோ, கலிங்கத்திலிருந்தோ வந்து இலங்கையில் குடியேறினார்கள். இப்போது வந்திருக்கும் பூகம்பத்தைப் போல் அந்த நாளிலும் ஒரு பூகம்பம் வந்திருக்கும்; அதற்குப் பயந்து ஓடி வந்தார்கள். தமிழர்களாகிய நாங்கள்தான் இலங்கையின் ஆதிக் குடிகள். அப்படி நாங்கள் வெளியிலிருந்து வந்திருக்கும் பட்சத்தில் வடக்கிலிருந்து வந்தவர்கள் அல்ல. இலங்கைக்குத் தெற்கே லமூரியா கண்டம் கடலில் மூழ்கியபோது அங்கிருந்து கிளம்பி வந்தோம். சிலர் இலங்கையில் தங்கினோம். சிலர் தமிழகத்துக்குப் போனோம் எப்படியும் முதலில் இலங்கைக்கு வந்தவர்கள் நாங்கள்தான்!" என்று வித்வான் கனகசுந்தரம்



சக்கைபோடு போட்டார். அவரை யார் மறுத்துச் சொல்ல முடியும்? முடியவே முடியாது. லமூரியா கண்டம் இலங்கைக்குத் தெற்கே இந்துமகா சமுத்திரத்தில் இருந்திருக்கவேண்டும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஏனெனில் லமூரியா கண்டம் இருந்திராவிட்டால் அது எப்படி முழுகியிருக்க முடியும். முடியாதுதானே! எப்போது லமூரியா கண்டம் கடலில் மூழ்கிற்று என்று ஏற்பட்டதோ, அதற்கு முன்னால் வெளியே அது இருந்திருக்கத் தானே வேண்டும்!

ஆவேசமும் ஆத்திரமும் உள்ளவர்கள்தான் எந்தக் காரியத்தையும் சாதிக்கமுடியும். வித்வான் கனகசுந்தரம் அவர்களிடம் இந்தப் பண்புகள் இருக்கின்றன. அதோடு நிர்வாகத் திறமையும் இருக்கிறது. தமிழ்ச் சங்க ஆண்டு விழாவை அவர் இவ்வளவு சிறப்பாக நடத்தியதே அவருடைய திறமைக்குச் சான்றாகும். தமிழ்த்தாயை இலங்கையிலிருந்து ஓட்டி விடலாம் என்று யாராவது கனவு கண்டிருந்தால் அது இனி ஒருக்காலும் பலிக்கப் போவதில்லை. ஏனெனில் தமிழ்த் தாய்க்குக் கொழும்பு நகரில் ஒரு நிலையான வாசஸ்தலம் ஏற்படுத்துவதற்கு வித்வான் கனகசுந்தரம் ஏற்பாடு தொடங்கி விட்டார். கடன் வாங்கி நிலம் வாங்கியாகிவிட்டது. நிலத்துக்காக வாங்கிய கடனை அடைத்துவிட்டுப் பிறகு தமிழ்த் தாய் வசிக்க அந்த நிலத்தில் ஓர் இல்லம் அமைக்கவேண்டும். கொழும்புத் தமிழ்ச் சங்கத்துக்கு ஒரு சொந்தக் கட்டடம் மட்டும் ஏற்பட்டு விடட்டும்; அப்புறம் "தமிழை இலங்கையிலிருந்து விரட்டுவேன்" என்று எவன் துணிந்து சொல்ல முன் வருவான்? பார்க்கலாம் ஒரு கை!

காரியதரிசி பாலசுந்தரம் அவர்களின் மனோரதம் நிறைவேறுவது அப்படியொன்றும் பிரமாதமான காரியமன்று. விரைவிலேயே அது நிறைவேறி விடும் என்று நம்புகிறேன். தமிழ்ச்சங்க விழாவில் கூடியிருந்த ஆயிரக்கணக்கான தமிழர்களின் மலர்ந்த முகங்கள் எனக்கு நம்பிக்கை அளித்தன. வித்வான் கனகசுந்தரம் இனிய தமிழ்ப் பண்புக்குரிய முறையில் அவர்களுடைய ஒத்துழைப்பைக் கோரிப் பெற்றுத் தமிழ்ச் சங்க கட்டிடத்தை நிறுவுவார் என்று நம்புகிறேன்.

தமிழ்ச் சங்க விழாவில் கூடியிருந்தவர்களைப் பற்றிச் சில வார்த்தைகள் இங்கே கூறியே தீர வேண்டும். தமிழகத்தில் சென்ற ஏழெட்டு ஆண்டுகளாகப் பல தமிழ் விழாக்கள், கவிஞர் விழாக்கள், நடந்திருக்கின்றன. "அந்த விழாக்களில் பலவற்றுக்கும் நான் சென்றிருக்கிறேன். ஆனால் இந்தச் சபையைப் போலப் பார்த்ததில்லை" என்று கொழும்பு தமிழ்ச்சங்கத்தில் சொன்னேன். அதையேதான் இங்கேயும் சொல்கிறேன். அங்கே ஒன்றும் இங்கே வேறொன்றும் சொல்லும் வழக்கம் என்னிடம் கிடையாது. தமிழ் நாட்டில் நடக்கும் தமிழ் விழாக்களில் வெள்ளை வெளேரென்ற ஆடை அணிந்து மலர்ந்த முகங்களுடன் சொற்பொழிவுகளை ரஸித்து அனுபவித்துக் கொண்டிருப்போர் கூட்டத்தைச் சபையில் ஒரு பகுதியில் பார்க்கலாம். அவர்கள் செட்டி நாட்டிலிருந்து வந்த தமிழன்பர்களாயிருப்பார்கள். ஸ்ரீ சா. கணேசன் அவர்களுடைய சட்டை யணியாத கரிய திருமேனி மற்றவர்களின் ஆடை வெளுப்பை நன்கு எடுத்துக் காட்டும். கொழும்பில் தமிழ்ச் சங்க விழாவில் கூடியிருந்த



கூட்டம் முழுதுமே அப்படியிருந்தது. எல்லாரும் தூய வெள்ளை உடை தரித்தவர்கள். (பெரும்பாலோர் அடையாறு பாணியில் சட்டை அங்கவஸ்திரம் அணிந்தவர்கள்.) அவ்வளவு பேரும் மலர்ந்த முகத்தினர். சொற்பொழிவாளர் கூறும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்து உணர்ந்து அனுபவித்து ஆனந்தப் படுகிறவர்கள். ஒவ்வொரு சமயம் எனக்குத் தோன்றியது. மேடையில் ஏறிச் சொற்பொழிவு ஆற்றுகிறவர்களைக் காட்டிலும் சபையில் அமர்ந்திருப்பவர்கள் அதிகம் படித்து அறிந்தவர்கள் என்று. தமிழனுக்குரிய உயர்ந்த பண்பாட்டின் காரணமாகவும் தமிழன்பு காரணமாகவுமே அவர்கள் அவ்வளவு உற்சாகத்துடன் சொற்பொழிவுகளை ரஸித்து மகிழ்கிறார்கள் என்றும் கருதினேன்.

ஆண் மக்கள் மட்டும் அல்ல; பெண் மணிகள் பகுதியிலும் அப்படியேதான். யாழ்ப்பாணத் தமிழர் குடும்பங்களில் படித்த பெண்மணிகள் அதிகம். இலங்கையின் முன்னேற்றத்துக்குப் பல துறையிலும் காரணபுருஷரான ஸர். பொன்னம்பலம் ராமநாதன் அவர்கள் யாழ்ப்பாணத்தில் பெண்கள் கலாசாலையொன்று நிறுவினார். அதில் படித்த பெண்மணிகள் பலர் இப்போது கொழும்பில் பெரிய குடும்பங்களில் எஜமானிகளாயிருக்கிறார்கள். அவர்கள் "சைவ மங்கையர் கழகம்" என்னும் ஸ்தாபனத்தை நிறுவி நன்கு நடத்திவருகிறார்கள். அவர்களுடைய கழக மண்டபத்திலேதான் தமிழ்ச்சங்க விழா நடந்தது. இதிலிருந்து தமிழ் விழாவுக்கு வந்திருந்த பெண்மணிகள் எந்தத் தரத்தைச் சேர்ந்தவர்களாயிருப்பார்கள் என்று ஊகித்துக்கொள்ளலாம்.

மண்டபத்தில் பாதி இடத்தைத் தாய்மார்களே அடைத்துக் கொண்டார்கள். சில தாய்மார்கள் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தார்கள். ஆனால், அவர்கள் பகுதியிலிருந்து ஏதேனும் பேச்சுச் சத்தம் அல்லது 'குவா குவா' சத்தம் வர வேண்டுமே? அவ்வப்போது சொற்பொழிவை ரஸித்துச் சிரிக்கும் சத்தத்தைத் தவிர வேறு சத்தமே கிடையாது. சுருங்கச் சொன்னால், அங்கே வந்திருந்த தாய்மார்கள் தங்கள் மகவுகளைக்கூட மறந்திருந்தார்கள். குழந்தைகள் அழுகையை மறந்திருந்தன. ஆண் பிள்ளைகளோ சுருட்டுப் புகைத் தலைக்கூட மறந்து தமிழின்பத்தில் லயித்திருந்தார்கள். சபையிலிருந்தவர்கள் யாருமே சுருட்டுப் புகைக்கவில்லை! ஸ்ரீ அருள்நந்தி கூடத்தான்! இந்த விந்தையை என்னவென்று சொல்வது? அவர்களுடைய தமிழன்பை என்ன சொல்லிப் பாராட்டுவது? இயலாத காரியம்.

இத்தகைய அருமையான தமிழன்பர்கள் ஆயிரக் கணக்காக உள்ள நகரத்தில் தமிழ்த் தாய்க்கு ஒரு சிறிய கட்டிடம் கட்டுவதுதானா பெரிய காரியம்? நல்ல முறையில் முயற்சி தொடங்கினால், இலங்கையில் வாழும் பதினைந்து லட்சம் தமிழர்களும் அந்தத் திருப்பணிக்கு உதவி செய்வார்கள் என்பது நிச்சயம்.

* * *

"அங்கே ஒன்றும் இங்கே ஒன்றும் சொல்லும் வழக்கமில்லை என்றீரே? சென்ற இதழில் 'ஏழரை லட்சம்' தமிழரைப் பற்றிச் சொல்லியிருந்தீர்? இந்த இதழில் 'பதினைந்து லட்சம் தமிழர்' என்கிறீரே! ஏழு நாளைக்குள் ஏழரை லட்சம் தமிழர்கள் அதிகமானது எப்படி?" என்று நேயர்கள் சிலர் கேட்கக் கூடும்.



என் அன்பார்ந்த நேயர்களே! கட்டாயம் நீங்கள் அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டியது தான். நான் பதில் சொல்லக் கடமைப் பட்டவன். சென்ற இதழில் நான் கூறியதும் உண்மை; இந்த இதழில் நான் மேலே கூறியிருப்பதும் உண்மை. சென்ற இதழில் குறிப்பிட்ட ஏழரை லட்சம் தமிழர்கள் கடந்த நூறு ஆண்டுக்குள் தோட்டத் தொழிலாளிகளாகவும் வீட்டு வேலைக்காரர்களாகவும் சில்லறை வர்த்தகர்களாகவும் சென்று இலங்கையில் குடியேறியவர்கள். இந்த ஏழரை லட்சம் தமிழர்களின் பிரஜா உரிமைகளைப் பறித்து அவர்களை விரட்டியடித்துவிடத்தான் கருணை மிகுந்த சிங்கள மந்திரிகள் முயன்று வருகிறார்கள்.

இலங்கையில் வசிக்கும் இன்னொரு ஏழரை இலட்சம் தமிழர்களோ பழைய புராதன பூர்வீக இலங்கைக் குடிகள். அவர்கள் இலங்கையில் எப்போது வந்து குடியேறினார்கள் என்பதை வரையறுத்துக் கூற இயலவில்லை. குறைந்த பட்சம் இரண்டாயிர வருஷங்களாக இந்தப் பழந்தமிழர்கள் இலங்கைக் கடற்கரையோரப் பகுதிகளில் வசித்து வருகிறார்கள். தமிழ் நாட்டுக்கும் இவர்களுக்கும் சரித்திரப் பூர்வமாகத் தொடர்பு நெடுகிலும் இருந்து வந்திருக்கிறது. சமீப காலத்தில் தமிழ் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்த பெரியார்களான ஸ்ரீ ஆறுமுக நாவலரும் சுவாமி விபுலானந்தரும் இலங்கையின் பூர்வீகத் தமிழ்ப் பரம்பரையைச் சேர்ந்தவர்களே.

தவிர, இலங்கை பல துறைகளிலும் புத்துயிர் பெறுவதற்குக் காரண புருஷராயிருந்த ஸர் பொன்னம்பலம் ராமநாதன் ஈழ நாட்டுப் பழம்பெருங் குடியைச் சேர்ந்தவர். ஒரு காலத்தில் இலங்கையில் ஸர் பி. ராமநாதனுக்கு இணையில்லாத செல்வாக்கு இருந்தது. பழைய யதேச்சாதிகார பிரிட்டிஷ் ஆட்சி நடந்து கொண்டிருந்த காலத்திலும் அவருக்கு இணையில்லாத மதிப்பு இருந்தது. சர்க்காரும் மதித்தனர்; மக்களும் மதித்தனர். சிங்கள மக்களோ அவருக்கு என்றென்றும் தீர்க்க முடியாத நன்றிக் கடன் பட்டவர்கள்.

முதலாவது மகாயுத்தம் நடந்துகொண்டிருந்த காலத்தில், 1917—18ல், இலங்கையில் ஒரு பெரிய கிளர்ச்சி நடைபெற்றது. இன்றையதினம் இலங்கையின் சர்வ சக்திவாய்ந்த பிரதமராயிருக்கும் ஸ்ரீ சேனநாயகர் அப்போது சாதாரண பிரஜையாக இருந்தார். அவரும் அவருடைய சகாக்கள் சிலரும் மதுவிலக்கு இயக்கத்தில் ஈடுபட்டிருந்தார்கள். இந்த இயக்கத்தின் காரணமாகச் சிங்களவரிடையே புத்துணர்ச்சி ஏற்பட்டது. அது எப்படியோ சிங்களவருக்கும் முஸ்லிம்களுக்கும் அடிதடி கலகமாக முடிந்தது. இன்னும் பெரிய வேடிக்கை என்னவென்றால், மேற்படி சமூகக் கலவரத்தை அப்போதிருந்த பிரிட்டிஷ் கவர்னர் பிரிட்டிஷ் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு எழுந்த பெரும் புரட்சியாக எண்ணிவிட்டார். உடனே சேனநாயகா, பேரன் ஜயதிலகா முதலிய பல முக்கியமான சிங்களத் தலைவர்களைப் பிடித்துச் சிறையில் அடைத்தார். சிங்கள மக்கள் பீதி யடைந்து செய்வதறியாது திகைத்திருந்தனர். அச்சமயம் ஸர் பொன்னம்பலம்



ராமநாதன் "நான் இருக்கிறேன், அஞ்சவேண்டாம்!" என்று அபயப் பிரதானம் அளித்தார். "இங்குள்ள அதிகாரிகளிடம் மன்றாடிப் பயனில்லை. இங்கிலாந்து சென்று உண்மையை எடுத்துக்கூறி நியாயம் பெற்று வருகிறேன்!" என்று பிரயாணமானார். எம்டன் கப்பல் குண்டு போட்ட காலத்தில், கடற் பிரயாணம் மிக அபாயம் நிறைந்ததாயிருந்த காலத்தில், இங்கிலாந்துக்குக் கப்பலில் பிரயாணமானார். பிரயாணத்தின்போதே இலங்கையின் நிலைமையை விளக்கியும், சிங்களத் தலைவர்களுக்கு இழைத்த அநீதியை எடுத்துக் காட்டியும் ஒரு புத்தகம் எழுதினார். இங்கிலாந்து சேர்ந்ததும் அதை அச்சிட்டுப் பார்லிமெண்டு அங்கத்தினருக்கும் மந்திரிகளுக்கும் கொடுத்தார். பிரதமர் லாயிட் ஜார்ஜையும் மற்ற மந்திரிகளையும் பேட்டி கண்டு பேசினார். அந்த அபாயகரமான யுத்த சமயத்தில் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்து கருத்தையும் மாற்றினார். அதன் பலனாகச் சிங்களத் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். அது மட்டும் அல்ல; மேற்கூறிய அநீதிக்குக் காரண புருஷரான பிரிட்டிஷ் கவர்னர் திருப்பி அழைக்கப்பட்டார். இம்மாதிரி கவர்னரைத் திருப்பி அழைத்தது என்பது அதற்கு முன் எப்போதும் நடந்ததில்லை. அதற்குப் பிறகு, இந்தியாவில் வைஸ்ராய் வேவல் திருப்பி அழைக்கப்பட்ட ஒரு சம்பவம்தான் நிகழ்ந்திருக்கிறது.

ஸர் பி. ராமநாதன் இலங்கை திரும்பி வருவதற்குள் மேற்கூறியவை நடந்துவிட்டன. எனவே, ஸர் பி. ராமநாதன் கொழும்பில் வந்து இறங்கியபோது அவருக்குச் சிங்களவர்கள் அளித்த வரவேற்பைப் போல் அதற்கு முன்னும் இலங்கை பார்த்ததில்லை.

அதற்குப் பிறகும் பார்த்ததில்லை. குதிரைகள் பூட்டிய ரதத்தில் அவரை வைத்துக் கொழும்பு வீதிகளில் ஊர்வலம் விட்டார்கள். ஆயிரமாயிரம் மக்கள் வீதிகளில் இருபுறமும் நின்று ஜய கோஷம் செய்தார்கள். ரதம் ஒரு முக்கியமான நாற் சந்திக்கு வந்ததும் குதிரைகளை ரதத்திலிருந்து அவிழ்த்து விட்டு விட்டுச் சிங்களத் தலைவர்கள் தாங்களே ரதத்தை இழுத்தார்கள்; ஸர் ராமநாதனிடம் தங்களுடைய அன்பையும் மரியாதையையும் நன்றியையும் காட்டுவதற்காகத்தான்.

இதெல்லாம் பழங்கதைதான். 'கதையா? கனவா?' என்றுகூடச் சந்தேகம் தோன்றும் வண்ணம் தற்சமயம் இலங்கையில் காரியங்கள் நடந்து வருகின்றன. சிங்கள மந்திரிகளின் மனப்போக்கு அவ்வளவு தூரம் மாறியிருக்கிறது. புதிதாக வந்த இந்தியர்களின் பிரஜா உரிமைகளைப் பறிக்கப் பார்ப்பதுபோல், யாழ்ப்பாணத் தமிழர்களின் பிரஜா உரிமைகளைச் சிங்கள மந்திரிகள் பறிக்க முடியாது. அவர்களை இலங்கையை விட்டுத் துரத்திவிடலாம் என்று கனவு காணவும் முடியாது.

ஆயினும் ஏழரை லட்சம் யாழ்ப்பாணத் தமிழர்களின் மனதில் இன்று அமைதி இல்லை; நாளை என்ன நேரிடுமோ என்ற கவலை குடிகொண்டிருக்கிறது. இன்று ஏழரை லட்சம் புதிய இந்தியர்களைத் துரத்தப் பார்க்கிறவர்கள் நாளைக்கு ஏழரை லட்சம் பழைய தமிழர்களை எப்படி நடத்துவார்கள் என்று யாருக்குத் தெரியும்? இலங்கையின் மொத்த ஜனத்தொகை 67 லட்சம். பழைய தமிழரும் புதிய தமிழரும் சேர்ந்தால் பதினைந்து லட்சம். இந்தப் பதினைந்து லட்சத்தில் ஏழரை லட்சம் பேரை உரிமை அற்றவர்களாக்கிவிட்டால் மிச்சமுள்ள ஏழரை லட்சம் தமிழர்கள் மிகக் சிறுபான்மையாகிவிடுவார்கள் அல்லவா?

யாழ்ப்பாணப் பழந்தமிழர்களில் பெரும் பணக்காரர்களோ, தோட்ட முதலாளிகளோ அதிகம் பேரில்லை. பெரும்பாலும் நடுத்தர வகுப்பினர். படிப்பு, சர்க்கார் உத்தியோகம், வக்கீல் வேலை, உபாத்தியாயர் வேலை முதலியவற்றில் ஈடுபட்டிருப்பவர்கள். வருங்காலத்தில் இவர்களுடைய நிலைமை என்ன ஆகும்? எனவே, பழந்தமிழர்களில் தீர்க்க திருஷ்டி உள்ளவர்கள் எல்லாரும் புதுத் தமிழர்கள் நடத்தும் பிரஜா உரிமைப் போராட்டம் வெற்றி பெற வேண்டும் என்று மனமார விரும்புகிருர்கள்.

யாழ்ப்பாணத் தமிழர்களுடைய தமிழன்பைக் குறித்து முன்னம் மகிழ்ச்சியுடன் கூறினேன். இனியும் அதைப் பற்றிச் சொல்ல வேண்டியதாயிருக்கும். ஆனால், அவர்களுடைய அரசியலைப் பற்றி அவ்வளவு மகிழ்ச்சியுடன் சொல்வதற்கில்லை. அதைப் பற்றிச் சோகரசம் கலவாமல் சொல்லவோ எழுதவோ இயலாதுதான்.

எனக்குத் தெரிந்தவரையில் இலங்கைத் தமிழர்களிடையில் நாலு அரசியல் கட்சிகள் இருக்கின்றன. ஒன்று, பழைய நிதானக் கட்சி; இரண்டு, தமிழ்க் காங்கிரஸ் கட்சி என்னும் புதிய ஒத்துழைப்புக் கட்சி; மூன்ருவது, தமிழரசுக் கட்சி அல்லது சமஷ்டிக் கட்சி; நாலாவது, சுதந்திரக் காந்தீயக் கட்சி.

பழைய நிதானக் கட்சியைச் சேர்ந்தவர்கள், ஸர் பி. ராமநாதனுடைய மாப்பிள்ளை ஸ்ரீ எஸ்.

நடேசன், ஸர் அருணுசலத்தின் குமாரர் ஸர் ஏ. மகாதேவா முதலியவர்கள். இவர்கள் தமிழர்களுடைய உரிமைகளுக்காகப் போராடுவதில் பின் வாங்கியவர்கள் அல்ல. சிங்கள மந்திரிகளுக்கு இவர்களிடம் மரியாதை உண்டு. அவசியமானபோது ஒத்துழைத்தும் அவசியமானபோது போராடியும் வந்தார்கள்.

இவர்களுக்குப் போட்டியாகத் தமிழ்க் காங்கிரஸ் கட்சி ஏற்பட்டது. இதன் தலைவர் ஸ்ரீ பொன்னம்பலம் என்பவர். பத்து வருஷத்துக்கு முன்னுல் நான் இலங்கை சென்றிருந்தபோது இவரை 'இலங்கையின் எரிமலை' என்று பலரும் சொன்னுர்கள். தீப்பொறி பறக்கும்படி சிங்கள மந்திரிகளைத் தாக்கியும் தமிழர் உரிமைகளைத் தாங்கியும் பேசுவார். இவர் போகுமிடங்களுக்கெல்லாம் நெருப்பணைக்கப் பின்னுேடு ஒரு 'பயர் என்ஜின்' போகும் என்று வேடிக்கையாகச் சொல்வார்கள்.

இத்தகைய வீராவேசத்துடன் ஸ்ரீ பொன்னம்பலம் கட்சியார் சென்ற தேர்தலில் போட்டியிட்டுப் பழைய பிரமுகர்களைத் தோற்கடித்தார்கள். சில நாள் வரையில் இலங்கைப் பார்லிமெண்டில் போராடியும் வந்தார்கள். பிறகு, ஒரு நாள் ஸ்ரீ பொன்னம்பலம் ஸ்ரீ சேனநாயகாவின் மந்திரி சபையில் மந்திரியாகி விட்டார்! மந்திரி வேலை நன்றுகவே பார்த்து வருகிறுர். பேச்சும் முன்னைவிடத் தீவிரமாகவே பேசிவருகிறுர். எனினும், இது அவருடன் சேர்ந்திருந்தவர்களிலேயே சிலருக்குப் பிடிக்கவில்லை.

அப்படிப் பிடிக்காமல் தமிழ்க் காங்கிரஸ் கட்சியை விட்டு வெளியேறிச் சிலர் 'தமிழரசுக் கட்சி' என்ற



புதிய கட்சியை அமைத்திருக்கின்றனர். இந்தக் கட்சியின் தலைவர் ஸ்ரீ செல்வநாயகம். தமது கட்சியைப் பிரசாரம் செய்வதற்காகச் "சுதந்திரன்" என்னும் தினப் பத்திரிகையை இவர் ஆரம்பித்து நடத்திவருகிறுர். அதில் பொருள் நஷ்டமும் அடைந்து வருகிறுர் என்று கேள்விப்பட்டேன்.

"சுதந்திரன்" ஆசிரியரும், மற்றும் அங்குள்ள உதவி ஆசிரியர் சிலரும் என் நண்பர்கள். எனவே, அவர்களைச் சந்திக்கச் "சுதந்திரன்" காரியாலயத்துக்குப் போனேன். அங்கே ஸ்ரீ செல்வ நாயகம் இருந்தார். அப்போதுதான் என்னுடைய பெருமை எனக்குத் தெரிந்தது! குறைந்த பட்சம் பதினுயிரம் பேருக்குச் சமம் நான் என்று அறிந்துகொண்டேன். ஏனெனில், பதினுயிரம் பேர் அடங்கிய கூட்டத்தில் பிரசங்கம் செய்வதுபோல் ஸ்ரீ செல்வநாயகம் தமது கட்சியை எனக்குச் சொற்பொழிவாகவே ஆற்றினுர்

இது ஒரு பழைய சம்பவத்தை எனக்கு ஞாபகப் படுத்திற்று. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் மாதம் மும்மாரி பொழிந்து தேசம் சுபிட்சமாயிருந்த காலத்தில், மகாத்மா சுயராஜ்ய இயக்கத்தை ஆரம்பித்தார். சுயராஜ்ய மந்திரத்தைக் கிராமங் கிராமமாகப் போய்ச் சொல்லவேண்டுமென்று தொண்டர்களுக்குக் கட்டளையிட்டார். நானும் சில கிராமங்களுக்குப் போனேன். ஒரு கிராமத்தில் தம்பட்டம் அடித்து, கிராமச் சாவடிக்கு முன்னுல் மாபெரும் கூட்டம் நடைபெறும் என்று அறிவித்த பிறகு, குறிப்பிட்ட நேரத்தில், கையில் ஒரு ஹரிகேன் லாந்தருடன் சாவடிக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே ஒரே ஒரு மனிதர்தான் ஆஜராயிருந்தார். அந்த

ஒருவராவது வந்திருக்கிறாரே என்ற நன்றி உணர்ச்சியுடன், பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவில் செய்துவரும் அட்டூழியங்களைப் பற்றி, சாங்கோபாங்கமாகக் கேட்பவரின் இரத்தம் கொதிக்கும்படியாக, ஒன்றேகால் மணி நேரம் பிரசங்கம் செய்தேன். நானே வந்ததனை சாரமும் சொல்லிக்கொண்ட பிறகு சபையோராகிய அந்தத் தனி நபரைப் பார்த்து, "ஐயா! தங்கள் தேசபக்தி என்னைப் பரவசப்படுத்துகிறது. தாங்கள் யாரோ! எந்த ஊரோ?" என்றேன்.

அதற்கு அந்தப் புண்ணியவான், "என்னைத் தெரியவில்லையா, ஸாமி! நான் உம்மைத் தொடர்ந்து கோபி செட்டிபாளையத்திலிருந்து கரூர் வரையில் வந்திருக்கிறேனே? நான் சி. ஐ. டி. க்காரன்! உங்களைக் கண்காணிப்பதற்காக என்னைப்போட்டிருக்கிறார்கள்!" என்றான்.

நல்லவேளையாக நான் சி. ஐ. டி. க்காரன் அல்ல மற்றப்படி ஸ்ரீ செல்வநாயகம் என்னை ஒரு பெரிய பொதுக் கூட்டமாக நினைத்துச் சக்கைப்போடுபோட்டு விட்டார்.

ஒரு இலட்சியத்தில் ஆவேசம் உள்ளவர்கள்தான் இப்படியெல்லாம் செய்யக்கூடும். ஸ்ரீ செல்வநாயகத்துக்கு ஆவேசம் இருக்கிறது. அத்துடன் வாதத் திறமையும் அபாரமாயிருக்கிறது. இலங்கையில் தமிழர்கள் வசிக்குமிடங்கள் ஒரு தனி அரசு ஆக்கப்படவேண்டுமென்று அவர் சொல்கிறார். தனி அரசு என்றால் பாகிஸ்தானைப்போன்ற தனி அரசு அல்ல. உள்நாட்டுக் காரியங்களில் சர்வாதிகாரம் உள்ள தனி அரசும் வெளிநாட்டு அரசியல், போக்குவரவு, சைன்யம் முதலியவற்றுக்கு இலங்கையுடன் இணைப்பும் இவர்கள்



கோருகிறார்கள். இதைச் சமஷ்டி அரசியல் என்றும் ஸ்ரீ செல்வநாயகம் கோஷ்டியார் சொல்கிறார்கள்.

தமிழரசுக் கோரிக்கைக்கு எவ்வளவு நியாயம் இருக்கிறது என்பதை நிரூபிக்கும் பொருட்டு, இலங்கையில் தமிழர்கள் மிகப் பெரும்பாலராய் வசிக்கும் இடங்களையெல்லாம் குறிப்பிட்டு ஸ்ரீ செல்வநாயகம் ஒரு படம் தயாரித்திருக்கிறார். அந்தப் படத்தின்படி கடற்கரையோரமாகக் கோடுபோட்டுக் குறிப்பிட்ட இடங்கள் எல்லாம் தமிழர் வாழும் பிரதேசங்கள். இலங்கையின் நடுமத்தியில் குறிப்பிட்ட பிரதேசம் புதிதாக வந்த தமிழ்த் தொழிலாளிகள் வசிக்கும் தோட்டப் பிரதேசங்கள். ஸ்ரீ செல்வநாயகம் திட்டத்தின்படி இலங்கை விஸ்தீரணத்தில் மூன்றில் ஒரு பகுதி தமிழரசாக மாறவேண்டும். இந்தக் கட்சிக்கு இலங்கையில் எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்பதைக் கவனிக்க எனக்கு அவகாசம் இல்லை. ஸ்ரீ செல்வநாயகத்தின் அந்தரங்க சுத்தியான ஆர்வத்தைக் காண மட்டுமே முடிந்தது.

"சுதந்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சிவநாயகம் நல்ல மறுமலர்ச்சி எழுத்தாளர். அத்துடன் சிறந்த பேச்சாளர். தமிழ்ச் சங்க விழாவில் இவர் நன்கு ஒத்துழைத்து ஓர் அரிய சொற்பொழிவும் ஆற்றினார்.

ஒரு பத்திரிகையைப் பற்றிச் சொன்ன பிறகு கொழும்பில் நடந்து வரும் இன்னும் இரு தினப் பத்திரிகைகளைப் பற்றியும் சொல்லிவிட வேண்டியது தான்.

இலங்கையில் இன்று மிகப் பிரபலமாக விளங்கும் தினத் தமிழ்ப் பத்திரிகை "வீரகேசரி" முப்பதினாயிரம் பிரதிகளுக்குமேல் இந்தப் பத்திரிகை

விநியோகமாகி வருகிறது. பலவிதக் கஷ்டங்களுக்கு உள்ளாகிவரும் இந்தியர்களின் கட்சியை எடுத்துச் சொல்லி "வீரகேசரி" தீவிரமாகப் போராடி வருகிறது. யாழ்ப்பாணத் தமிழர்களின் நலன்களையும் பாதுகாக்க முயன்றுவருகிறது. ஆகவே, இலங்கையிலுள்ள எல்லாத் தமிழர்களின் அபிமானத்தையும் பெற்றிருக்கிறது. இவ்வளவுடன், எந்தக் கட்சியையும் நேர்மையுடன் எடுத்துச் சொல்லிப் போராடுவதினால் இலங்கை சர்க்காரும்—சிங்கள மந்திரிகளும்கூட "வீரகேசரி"யை மதித்து நடந்து கொள்ளுகின்றனர். "வீரகேசரி" ஆசிரியர் ஸ்ரீ கே. பி. ஹரன் பரம சாத்வீகரான மனிதர். உயர்ந்த இலட்சியங்கள் படைத்தவர். சிறந்த ஆஸ்திகர்; பக்திமான். பத்திரிகைத் தொழிலுக்கு அடுத்தபடியாக ஆஸ்திக முயற்சிகளில் அவருக்குச் சிரத்தை. கொழும்பு நகரில் ஸ்ரீ சுந்தரம் பிள்ளை, ஸ்ரீ கதிர்வேலு செட்டியார் போன்றவர்கள் செய்யும் கோயில் திருப்பணிகள்—கூட்டுப் பிரார்த்தனைகள் ஆகியவற்றில் கலந்து கொண்டு ஊக்கத்துடன் உதவி செய்து வருகிறார்.

"வீரகேசரி"யின் செய்திப் பகுதி ஆசிரியர் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் அஸகாய சூரர். அருபது டன் ருஷிய டாங்கி ஒன்றிடம் உள்ள வேகமும் ஆற்றலும் வாய்ந்தவர். இலங்கையில் அவருக்குத் தெரியாத பிரமுகர் அநேகமாக யாரும் இருக்க முடியாது. ஆனால், பெரும்பாலோருடைய முகம் அவருக்குத் தெரியாது. குரல் மட்டும் தெரியும். ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் டெலிபோனில் கூப்பிடுகிறார் என்றால், எப்பேர்ப்பட்ட பிரமுகரும் மற்றக் காரியங்களை நிறுத்தி வைத்துவிட்டு டெலிபோனிடம் செல்வார்கள்.



தமிழ்ச் சங்க விழா உண்மையில் "வீரகேசரி"யின் விழா என்று சொல்லும்படியாக, விழாவின் நடவடிக்கைகளை அந்தப் பத்திரிகையில் பிரசுரித்திருந்தார்கள். ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் ஒவ்வொரு கூட்டத்திலும் ஆஜராயிருந்தார். அவருக்குத் தமிழ்ச் சுருக்கெழுத்துத் தெரியாது. ஆனால், அவ்வளவு பிரசங்கங்களையும் எப்படித்தான் வார்த்தைக்கு வார்த்தை சரியாயிருக்கும்படி பத்திரிகையில் பிரசுரித்தார் என்பது மிக்க வியப்பளித்தது.

ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ், "வீரகேசரி"யின் செய்தி ஆசிரியர் என்பதைத் தவிர, இந்தியாவிலும் மலேயாவிலும் உள்ள பல பத்திரிகைகளுக்கு இலங்கை நிருபராயிருந்து வருகிறார். "வீரகேசரி" வேலைகளுக்குக் குந்தகம் நேராமல் மற்ற வேலைகளைப் பார்க்கிறார்.

ஒரு பொதுக் கூட்டத்தில் மாலை ஒன்பது மணி வரையில் ஆஜராயிருந்துவிட்டு, வீடு சென்று "வீரகேசரி"க்கு விவரமாக எழுதிக் கொடுத்துவிட்டு, பிறகு பம்பாய்—மலாய்—சென்னைப் பத்திரிகைகளுக்கு எழுதி ஆகாசத் தபாலில் சேர்ப்பித்துவிட்டு, இரவு மூன்று மணிக்கு ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் தூங்கப் போவார் என்று அறிந்தேன். அவர் வாழ்க!

ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் இலங்கையின் பிரஜையாகத் தம்மைப் பதிவு செய்து கொண்டிருக்கிறார். இது இலங்கைக்கு லாபம்; இந்தியாவுக்கு நஷ்டம். நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!

கொழும்பில் நடந்துவரும் மற்றொரு தினப் பத்திரிகை "தினகரன்." பொதுவாக இது இலங்கை சர்க்காரை ஆதரிக்கும் பத்திரிகை. தமிழ்ச் சங்க

விழா சம்பந்தமாகத் "தினகரன்" ஒத்துழைக்க வில்லை யென்றும், செய்திகளையே போடவில்லை யென்றும் சில தமிழன்பர்கள் குறிப்பிட்டார்கள். விழா நடந்த மறு தினம் பார்த்தால், "தினகரன்" மற்றப் பத்திரிகைகளைக் காட்டிலும் ஒரு படி அதிகமாகவே தமிழ்ச் சங்க ஆண்டு விழாவுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பல பத்திகள் பிரசுரித் திருந்தது.

இதிலிருந்து ஒன்று நிச்சயமாயிற்று. இலங்கை யிலுள்ள தமிழர்கள் அரசியல் முதலிய துறைகளில் எவ்வளவு மாறுபட்டிருந்தாலும் தமிழ் மொழியைப் போற்றுவதில் அனைவரும் ஒன்று படுவார்கள் என்பதுதான். ஸ்ரீ தூரனுக்கும் எனக்கும் இது எவ்வளவு மகிழ்ச்சி அளித்திருக்கும் என்று சொல்லவும் வேண்டுமா?

## 4

அறுபது டன் ருஷிய டாங்கிக்கு இணையான ஆற்றல் வாய்ந்த ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் என்பவரைப் பற்றி முன்னர் குறிப்பிட்டேன் அல்லவா? அப்படிப்பட்ட ஸ்ரீ கே. வி. எஸ். வாஸின் ஆற்றலைக்கூட மீறிவிட்ட ஒரு செய்தியை இப்போது கூற விரும்புகிறேன். திருவாளர் விபீஷண ஆழ்வார் அவர்களுக்குச் சில நாளைக்கு முன்பு ஏற்பட்ட அனுபவத்தை உங்களுக்குக் கூறியே தீர வேண்டும். கூறுவிட்டால் விபீஷண ஆழ்வாருக்கு மன நிம்மதி ஏற்படாது.



திருவாளர் விபீஷண ஆழ்வார் தனிப்பெரும் சிரஞ்சீவித் தமிழர் என்பது ஆராய்ச்சியாளர் அனைவரும் ஒப்ப முடிந்த செய்தியாகும். இராவணன் எப்போது தமிழனோ, அப்போது அவனுடைய தம்பி விபீஷணனும் தமிழன்தான். இராவணன் தமிழன் என்பது அவனுடைய பத்துத் தலைகளின் மேலும் அடித்துச் சத்தியம் செய்து முடிந்துபோன செய்தி. அவன் முப்புரி நூல் அணிந்து, யாழ் என்னும் இசைக் கருவியை மீட்டிக்கொண்டு, சாம வேதத்தை ஓதிச் சிவபெருமானைப் புகழ்ந்து பாடியதிலிருந்து இராவணன் தமிழன் என்பது உள்ளங்கை தென்னங் கனியாக விளங்கி யிருக்கிறது. இராவணனைத் தமிழன் என்றோ, குறைந்த பட்சம் திராவிடன் என்றோ, நாம் ஒப்புக்கொண்டு விடுவதே நலம். இல்லாவிடில், நமது ஆராய்ச்சிக்காரர்கள் கிஷ்கிந்தா புரிவாசிகளுக்குத் தமிழர் பட்டத்தைக் கட்டித் தொலைத்து விடுவார்கள். வாலி இறந்ததும் தாரை புலம்பிய கட்டத்தை எடுத்துக் காட்டி, "ஒரு தனித் தமிழ்க் கைம்பெண்ணைத் தவிர வேறு யார் இப்படி அருமையாகப் புலம்பி யிருக்கமுடியும்?" என்று ஒரு பெரிய போடாகப் போட்டு நம்மைத் திண்ற அடித்து விடுவார்கள்! நிற்க.

நமது சிரஞ்சீவி விபீஷண ஆழ்வார் நெடுங்காலம் இலங்கையை ஆண்டு வந்த பிறகு கலியுகம் தொடங் கிற்று. உடனே விபீஷணரின் கவலையும் தொடங் கிற்று. சீதையும் இராமருமாகச் சேர்ந்து நம்மை இப்படி மோசம் செய்து கெடுத்துவிட்டார்களே என்று வருந்தினர். இந்த உலகில் என்றென்றைக்கும் இருக்கும்படி சொல்லிவிட்டுப் போனார்களே என்று

நினைத்து மிகவும் வருத்தப்பட்டார். அதிலும் ஸ்ரீராமர் என்ன சொன்னார்?

" இந்தா விபீஷணா லங்காபுரி ராஜ்யம்!
இந்தா! இந்தா! இந்தா!"

என்று பல்லவி, அநுபல்லவி, சரணங்களாகச் சொல்லிக் கொடுத்து விட்டுப் போய்விட்டார்! அவருக்கென்ன சொல்வதற்கு? இந்த இலங்காபுரி ராஜ்யத்தை என்றென்றைக்கும் யார் கட்டிக் கொண்டு மாரடிப்பது?... இப்படிக் கவலைப் பட்டுக் கொண்டே விபீஷண ஆழ்வார் கலியுக ஆரம்பத்தில் கொழும்புக்கு அருகில் உள்ள ஒரு குன்றின் குகையில் படுத்து அண்ணன் கும்பகர்ணனுடைய தொழிலை மேற்கொண்டார். தமிழர்களின் தொழிலை மேற்கொண்டார் என்று சொல்வதும் தவறாகாது.

ராட்சதர்களுடைய காலக்கணக்கின்படி ஒரு ஜாம நேரம் தூங்கிவிட்டு எழுந்து பார்த்தால், இலங்கையில் எல்லாம் மாறுதலாயிருக்கக் கண்டார். அவர் தூங்கும் சமயத்தில் என்னவெல்லாமோ நடந்து விட்டது. தூங்குகிறவனுடைய தொடையில் கயிறு திரிப்பவர்கள் அல்லவா ஐரோப்பியர்கள்? முதலில், போர்ச்சுகீயர் வந்தார்கள்; பிறகு டச்சுக் காரர் வந்தார்கள். இந்த இரு சாராரையும் எடுத்து விழுங்கக்கூடிய ஜான்புல் கடைசியாக வந்து சேர்ந்தார். ஜான்புல் பல வருஷ காலம் ஆட்சி செலுத்தி விட்டுத் தன்க்குச் சரியான வார்ஸு சிங்களவர்கள் தான்—அதிலும் கனம் சேனநாயகா தான்—என்று தீர்மானித்து, அவருடைய கையில் இலங்கா ராஜ்யத்தைக் கொடுத்து விட்டுப் போனார். எனவே விபீஷண ஆழ்வார் தூங்கி எழுந்ததும் முழி



முழி என்று முழிக்கும்படி நேர்ந்தது. இராஜ்யம் கையை விட்டுப் போனதில் விபீஷணருக்கு ஒரு மாதிரி சந்தோஷந்தான். எனவே "வாழ்க தூக்கம்" என்று கோஷித்து விட்டு, இலங்கையில் இனி சாதாரண பிரஜையாக வாழ்வது என்று தீர்மானித்தார். இங்கேதான் அவருக்குச் சங்கடங்கள் பல ஏற்பட்டன.

பிரஜா உரிமைப் பதிவு அதிகாரியிடம் சென்று "என்னை இலங்கையின் பிரஜையாகப் பதிவு செய்ய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். அதிகாரி அவரிடம் ஒரு கத்தை நமுனாக்களைக் கொடுத்துப் பூர்த்தி செய்து தரச்சொன்னார். விபீஷண ஆழ்வார் அந்த நமுனாக்களைப் பார்த்துவிட்டுத் திறுதிறு வென்று விழித்தார்.

"எழுதப் படிக்கத் தெரியாதா?" என்று அதிகாரி கேட்டார்.

"தெரியும்; ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்தில் எழுத்துக்கள் வேறு விதமாயிருந்தன. ஆகையால் அதிகாரி அவர்களே நமுனாக் களைப் பூர்த்தி செய்து சொள்ள வேண்டும்!"

அதிகாரி கருணைகூர்ந்து விபீஷணரைக் கேள்வி கேட்க ஆரம்பித்தார்.

"உம்முடைய பெயர் என்ன?"

"விபீஷணன்."

"தகப்பனார் பெயர்?"

"புலஸ்தியர்."

"பாட்டனார் பெயர்!"

"பிரம்மா."

"தகப்பனாரும் பாட்டனாரும் இலங்கையில் பிறந்து இலங்கையில் வசித்தவர்கள் தானா?"

"தகப்பனார் புலஸ்தியர் இலங்கையில் பிறந்து வளர்ந்தவர். அவருடைய பெயரால் பொலன்னருவா என்ற நகரமும் இருக்கிறது."

"பாட்டனார் விஷயம் என்ன"

"பாட்டனார் திருப்பாற்கடலில் மகாவிஷ்ணுவின் நாபிக் கமலத்தில் பிறந்து பிரம்மலோகத்தில் வசித்திருப்பவர் ...!"

"அப்போதே நினைத்தேன்!" என்றார் அதிகாரி. விபீஷணரை ஏற இறங்கப் பார்த்து, "அப்படியானால் உம் பாட்டனார் இலங்கைவாசி இல்லை!" என்றார்.

"இல்லை. ஆனால் அண்ணன் இராவணனுக்குப் பஞ்சாங்கம் பார்த்துச் சொல்லச் சில சமயம் இங்கே வந்ததுண்டு."

"சரி? நீர் இலங்கையின் வம்சாவளிப் பிரஜை உரிமை பெற முடியாது."

"அது இல்லா விட்டால், வேறு எந்தப் பிரஜா உரிமை கொடுத்தாலும் சரிதான்"

"நீர் இலங்கையில் பிறந்ததற்கும் இருந்ததற்கும் சாட்சி உண்டா?

விபீஷணர் சிறிது யோசித்துவிட்டு "பிறந்ததற்குச் சாட்சி கிடையாது. இருந்ததற்கு அனுமார் என்று ஒருவர் சாட்சி சொல்லக்கூடும். ஆனால், அவரைத் தேடிப் பிடிப்பது கஷ்டம்!" என்றார்.

"அந்த மாதிரி வாய்மூல சாட்சி உபயோகமில்லை எழுத்து மூலமான ஆதாரம் வேண்டும்."



இதைக் கேட்ட விபீஷணர் சுறுசுறுப்புடன் சென்று, வால்மீகி ராமாயணம், கம்ப ராமாயணம், துளசிதாஸ் ராமாயணம், ராம நாடகக் கீர்த்தனை ஆகிய புத்தகங்களைக் கஷ்டப்பட்டுத் தேடிப்பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தார்.

அதிகாரி அவ்வளவு புத்தகங்களையும் புரட்டிப் பார்த்து விட்டு, "இதெல்லாம் பழைய கதைகள். உபயோகமில்லை. திரேதா யுகத்துச் செய்தி இங்கே யாருக்கு வேணும்! 1938-வருஷத்திலிருந்து 1945-ம் வருஷம் வரையில் நீர் எங்கே இருந்தீர்?" என்று கேட்டார்.

"இலங்கையில்தான் இருந்தேன்."

"இதற்கு ஏதாவது தஸ்தாவேஜு மூலமான சாட்சியம் இருக்கிறதா?"

"எந்த மாதிரி?"

"இந்தியாவிலிருந்து ஏதாவது கடிதம், ரிஜிஸ்தர் மணியார்டர் மேற்படி ஆறு வருஷங்களில் வந்ததுண்டா? வந்த கடிதங்களின் உறைகளைப் பத்திரப் படுத்தி வைத்திருக்கிறீரா?"

"இல்லை."

"அப்படியானால், உமக்குப் பிரஜா உரிமையும் இல்லை."

இதைக் கேட்ட விபீஷணர் மூர்ச்சை யடைந்து விழுந்து எழுந்த பிறகு, "இனி இலங்கையில் இருப்பதா? வைகுண்டத்துக்குப் போய் முறையிடுவதா?" என்ற கவலையில் ஆழ்ந்திருக்கிறாராம்.

இதைக் கேள்விப்பட்டதும் விபீஷணரைப் பற்றிய கவலையில் நான் ஆழ்ந்தேன். முருகனைப்

பற்றிய கவலை தோன்றிய பிறகுதான் அவரை மறக்க முடிந்தது.

ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா? ஒரு மனிதருக்கு இரட்டைக் குழந்தைகள் பிறந்தன. இதையறிந்த சிநேகிதர் ஒருவர் வந்து தமது அனுதாபத்தைத் தெரிவித்தார். "உமக்குக் கூச்சல் என்றால் பிடிக்காதே! இரண்டு குழந்தைகளும் சேர்ந்து கூச்சல் போட்டால் பெருந் தொல்லையாயிருக்குமே?" என்று கேட்டார். "அதுதான் இல்லை! ஒற்றைக் குழந்தையாக இருந்தால்தான் கூச்சல் தொந்தரவு. இரண்டு குழந்தைகள் சேர்ந்து கூச்சலிடும்போது ஒன்றின் கூச்சல் இன்னொன்றின் கூச்சலில் மறைந்துவிடும் அல்லவா?" என்று சொன்னார் இரட்டைக் குழந்தையின் புத்திசாலித் தகப்பனார்.

இதுபோலவே முருகனைப பற்றி எனக்கு ஏற்பட்ட கவலையினால் விபீஷணரின் கவலையை நான் மறக்கலாயிற்று.

* * *

ரத்மனாலை விமான நிலையத்தில் நாங்கள் இறங்கியதும் அங்கே கூடியிருந்த நண்பர்களின் முகங்களுக்கு மத்தியில் ஒரு முகம் பளிச்சென்று மலர்ச்சியுடன் காட்சி தந்தது. யாரோ தெரிந்தவராய்த்தான் இருக்குமென்று அவரைப் பார்த்துப் புன்னகை செய்து வைத்தேன். உடனே அவரும் புன்னகை செய்து, "நீங்கள் கோவிலுக்கு வரவேண்டும், தெரியுமா? கோவிலுக்குக் கட்டாயம் வரவேண்டும்! இல்லாவிட்டால் உங்களைத் திரும்பிப் போக விட மாட்டோம்!" என்றார்.



டாக்டர் நல்லநாதனின் இல்லம் சேர்ந்ததும் மறுபடியும் அதே நண்பரைப் பார்த்தேன். "நீங்கள் கோவிலுக்கு வரவேண்டும். எங்கள் கூட்டுப் பிரார்த்தனையில் கலந்துகொள்ள வேண்டும்! இல்லாவிட்டால் விடமாட்டேன்!" என்றார். இந்த நண்பரின் பெயர் கே. வி. எஸ். சுந்தரம் என்றும், கொழும்பில் பிரபல வர்த்தகர் என்றும் அறிந்தேன்.

"கோவிலுக்கு வரவேண்டும்; கூட்டுப் பிரார்த்தனையில் கலந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் விடமாட்டேன்!" என்று அவர் மேலும் பத்துப் பன்னிரண்டு தடவை சொன்ன பிறகு, எனக்குக் கோபம் வந்து விட்டது.

"எந்தக் கோவிலுக்கு?" என்று கேட்டேன்.

"முருகன் கோவிலுக்கு" என்றார் ஸ்ரீ கே. வி. எஸ். சுந்தரம்.

"எந்த முருகன்?" என்றேன்.

சிறிது திகைத்துவிட்டு, "ஒரே முருகன்தான். அவர்தான்!" என்றார்.

"ஒரே முருகன்தான் என்றால், அவரை நான் தமிழ் நாட்டில் பார்த்தேனே? இங்கே எப்போது வந்தார்?"

"முன்னமே வந்துவிட்டார். வெகு காலமாக இங்கேதான் இருக்கிறார்."

"இது என்ன ஐயா, வேடிக்கை? வெகு காலமாக இங்கே இருக்கிறார் என்றால், இலங்கையின் பிரஜையாகப் பதிவு செய்து கொண்டிருக்கிறாரா?"

ஸ்ரீ சுந்தரம் விழித்துப்போனார். அவருடைய விழிப்புக்கு எனக்குக் காரணம் தெரியாமலில்லை

முருகப் பெருமான் இப்போதைய இலங்கைப் பிரஜா உரிமை விதிகளின்கீழ் பதிவு செய்துகொள்ள முடியாது. ஏனெனில், அவர் வள்ளி, தேவயானை ஆகிய இரண்டு பத்தினிகளையும் இரண்டு கண்களாக வைத்துக் கொண்டிருப்பவர் அல்லவா?

ஆகவே, முருகன் இலங்கையின் பிரஜை ஆக முடியாது. இரண்டு மனைவிகள் உள்ளவர் யாருமே இலங்கைப் பிரஜையாக முடியாது. ஒருத்தியை மனைவி என்றும், இன்னொருத்தியை வேறு ஏதாவது பெயர் சொல்லியும் அழைத்தால் புகழ்பெற்ற இலங்கையின் பிரஜையாகலாம்! இருவரையும் மனைவிமார் என்று அழைத்தால் அது சாத்தியமில்லை.

இருதார மணத்தைப் பற்றி என்னுடைய அபிப்பிராயம் எதிரிடையானதுதான். ஒரு தார மணங்கூட அவ்வளவு புத்திசாலித்தனமானது என்று நான் சொல்ல முடியாது. ஒரு தடவை, ஏதோ போகிறது என்று மன்னித்து விடலாம். இரண்டாந் தடவையும் ஒரு தவறைச் செய்தால் அதை யார் தான் சரி என்று ஒத்துக் கொள்ள முடியும்?

ஆகவே, இருதார மணத்தை நான் அவ்வளவாக விரும்புகிறவன் அல்ல. ஆனாலும், இந்தக் காரணத்தைக் கொண்டு அநேக ஆயிரம் இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை இல்லையென்று அடித்து விடுவதாயிருந்தால், அதை எப்படி நியாயம் என்று ஒத்துக்கொள்ள முடியும்?

இலங்கையில் ஏற்பட்டிருக்கும் இரு தாரப் பிரச்னையின் இரகசியம் இதுதான். தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யப்போன இந்தியத் தொழிலாளிகளில் பலர் ஒரு மனைவிக்கு மேலே கலியாணம்



செய்து கொண்டிருக்கிறார்களாம். முன்னே யெல்லாம் தோட்ட முதலாளிகளுக்கு இது சௌகரியமாயிருந்தது. தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்வதற்குப் பெண்கள் அதிகம் தேவை. அவர்களுக்குச் சம்பளம் குறைவாகக் கொடுத்தால் போதும். சுதந்திரமாக ஸ்திரீகளைக் கொண்டு வந்து தோட்டங்களில் விடுவதற்கில்லை. அதனால் பல சிக்கல்கள் ஏற்படும். ஆகையால் தோட்டத் தொழிலாளிகள் இரண்டு அல்லது மூன்று மனைவியர்களை மணந்து கொள்வதை முதலாளிகள் விரும்பினார்கள். அதிகக் கூலி வருமானம் வரும் என்ற காரணத்தினால் பல தொழிலாளிகள் அவ்விதம் இருதார மணம் செய்து கொண்டார்கள்.

இப்போது சிங்கள சர்க்கார் கொண்டு வந்திருக்கும் சட்டத்தின்படி மேற்படி வழக்கம் பிரஜா உரிமைக்குப் பெரும் இடையூறாக ஏற்பட்டிருக்கிறது. "பிரஜா உரிமையைக் கைவிடுவதா? அல்லது கட்டிய மனைவியைக் கைவிடுவதா?" என்ற தர்ம சங்கடமான நிலைமை பல ஏழைத் தொழிலாளிகளுக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. பாவம்! இரண்டு பெண்டாட்டிக்காரர்களுக்கு உள்ள கஷ்டங்கள் போதாதென்று இந்த நெருக்கடி வேறு அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

இந்த நெருக்கடியான பிரச்னை நமது முருகப் பெருமானுக்கும் ஏற்படத்தானே செய்யும் என்ற கவலை எனக்கு ஏற்பட்டது. எனவே, நண்பர் சுந்தரம் அவர்களிடம் "முருகனை இந்தியாவுக்கே திரும்ப அனுப்பி விடுவதுதானே?" என்று ஆனமட்டும் சொல்லிப் பார்த்தேன். நண்பர் சுந்தரம் "அது முடியவே முடியாது" என்று சொல்லிவிட்டார்.

பிறகு அவருடைய வற்புறுத்தலுக் கிணங்க ஜிந்துப்பட்டி ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி கோவிலுக்குப் போய்ப் பார்த்தபோது, நண்பர் சுந்தரம் அனுமதி கொடுத்தாலும் முருகன் அங்கிருந்து இலேசில் கிளம்பிவிட மாட்டார் என்று நான் முடிவு செய்ய வேண்டியதாயிற்று.

கோவில் என்றால், இது அல்லவா கோவில்? பக்தி என்றால் இது அல்லவா பக்தி? பிரார்த்தனை என்றால் இது அல்லவா பிரார்த்தனை?

கோவில் பிராகாரத்தில் அமைந்திருந்த விஸ்தாரமான மண்டபத்தில் அலங்கரித்த அழகிய ஊஞ்சல் மஞ்சத்தில் வள்ளி, தேவயானை சமேதராக முருகன் வீற்றிருந்தார். ஊஞ்சல் இலேசாக ஆடிக்கொண்டிருந்தது. முருகன் பக்தர்களுக்கு அருள் புரிய நெருங்கி நெருங்கி வருவது போல் தோன்றியது.

ஸ்ரீ சுந்தரம் அவர்களும் அவருடைய சகோதரரும் பட்டை பட்டையாக வெள்ளைத் திருநீறு அணிந்து, பலப் பல ருத்திராட்ச வடங்களைத் தரித்து, சிவ பக்தியே வடிவங் கொண்டவர்களாக விளங்கினார்கள். இவர்களைப் போல இன்னும் நூற்றுக் கணக்கான அடியார்கள் அச்சபையில் சேர்ந்திருந்தார்கள். திருச்செந்தூரிலிருந்து வந்திருந்த ஒரு பக்தர் இனிய குரலில் திருப்புகழ் பாடினார். அனைவரும் ஒரு முகமாக மனங்குவிந்திருந்து பிரார்த்தனை நடத்தினார்கள். பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. அப்படிப்பட்ட இடத்திலிருந்து புறப்படுவதற்கு முருகன் இலேசில் இணங்கிவிடுவாரா?



கொழும்பில் நாங்கள் தங்கிய சில தினங்களில் இன்னொரு ஆலயத்துக்குச் செல்லும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. கொழும்புக்குப் பக்கத்தில் கப்பித்தாவத்தை என்னும் விசித்திரப் பெயர் உள்ள ஊரில் ஸ்ரீ கைலாசநாதர் என்னும் பழமையான ஆலயம் இருக்கிறது. இது வெகு காலமாகச் சிதிலமாகக் கிடந்தது. ஸ்ரீ வி. எஸ். சாமிநாத செட்டியார் என்னும் வணிக வைசியர் அந்தப் பழைய ஆலயத்தை புதுப்பிக்கும் திருப்பணியில் ஈடுபட்டார். பதின்மூன்று ஆண்டுகள் முயன்று, தம் குலத்துப் பிரமுகர்கள் பலருடைய உதவியுடன் திருப்பணியை முடித்துக் கும்பாபிஷேகமும் நடத்தினார். கும்பாபிஷேகம் நடந்த மூன்று மாதத்திற்கெல்லாம் இறைவன் அந்தப் பெரியாரைக் கைலாசத்துக்கே அழைத்துக் கொண்டார்.

இந்தப் புனிதமான ஆலயத்தை எங்களுக்குத் தரிசனம் செய்துவைத்தவர் ஸ்ரீ பி. ஸி. கதிர்வேல் செட்டியார் என்னும் மற்றொரு பிரபல இந்திய வர்த்தகர். இவரும் சிறந்த பக்திமான். நம் திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயரின் குழாத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீ கைலாசநாதர் கோவிலில் இவர் சிரத்தை கொண்டிருப்பதோடுகூட, இன்னும் பல பொதுநலத் தொண்டுகளிலும் ஈடுபட்டிருக்கிறார். “இந்தியர்கள் இலங்கையில் பணம் சம்பாதித்து இந்தியாவுக்குக் கொண்டு போவதில் முனைந்திருக்கிறார்களே தவிர இலங்கையில் நிரந்தரமான தர்மம் எதுவும் செய்வதில்லை” என்ற புகார் இவரால் ஓரளவு நீங்கி வருகிறது என்று நண்பர்கள் சொன்னார்கள்.

தமிழ்ச் சங்க ஆண்டு விழாவின்போது பெற்ற அனுபவங்களிலிருந்தும் இந்த இரண்டு ஆலயங்களில் கண்ட காட்சிகளிலிருந்தும் ஸ்ரீ தூரனுக்கும் எனக்கும் ஒரு நிச்சயம் ஏற்பட்டது. தமிழ் நாட்டில் இப்போது சிலர் "தமிழை ஒழித்து விடுவோம்!" என்றும், இன்னும் சிலர் கடவுளைத் தொலைத்து விடுவோம்!" என்றும் பயமுறுத்தி வருகிறார்கள் அல்லவா? அப்படியே இவர்களுடைய கட்சி பிரமாதமான வலிமை பெற்று வெற்றி யடைந்தாலும், நம்முடைய தமிழும் தமிழரின் கடவுளும் கட்டாயம் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள். தமிழையும் தமிழரின் சமயத்தையும் தமிழ் நாட்டிலுள்ளவர்கள் கைவிட்டாலும் கூட இலங்கையிலுள்ள தமிழர்கள் போற்றிக் காப்பாற்றி வருவார்கள். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

இத்தகைய உறுதி பெற்றுக்கொண்டு கொழும்பு நண்பர்களிடம் விடையும் பெற்றுக்கொண்டு, ஸ்ரீ தூரனும் நானும் யாழ்ப்பாணத்துக்குக் கிளம்பினோம்.

## 5

**யா**ழ்ப்பாணத்தில் இடறி விழுந்தால்......இது என்ன? இடறி விழுவதற்கு யாழ்ப்பாணத்துக்குப் போகவேண்டுமா? உங்களூரிலேயே இடறி விழக் கூடாதா?...விழலாம், ஐயா, விழலாம்! உள்ளூரிலேயே நன்றாக இடறி விழலாம். ஆனால், உள்ளூரிலே இடறி விழுந்தால் எங்கேயாவது நடுச்சாலையில் விழுந்து தொலைப்போம். அல்லது ஒரு டிராம் வண்டி அல்லது மோட்டார் வண்டி அல்லது ஒரு ரயில் வண்டி மீது



விழுந்து தொலைப்போம். வண்டிகள் வீணில் சேதம் அடையும்; போக்கு வரத்துத் தடைப்படும்.

ஆனால், யாழ்ப்பாணத்தில் இடறி விழுந்தால் ஒரு உபாத்தியாயர் அல்லது ஒரு கல்விமான் மீது தான் விழுவோம். அப்படி விழுவதினால் அவர்களுக்குச் சேதம் ஏதேனும் ஏற்பட்டால் அதைப் பற்றிக் கவலைப்படமாட்டார்கள். ஆயிரம், பதினாயிரம் பேரில் ஒருவர் இருவர் குறைந்துபோனால் என்ன பிரமாத நஷ்டம்? ஒருவேளை இடறி விழும்போது பக்கத்தில் ஒரு ஆசிரியர் அல்லது கல்விமான் இல்லாமற் போனாலும், நாம் தரையில் விழுந்துவிட முடியாது. யாழ்ப்பாண நகரத்துக்குள் ஒரு சாலையோ ஒரு வீதியோ தரையில் விழுந்து வைக்கலாம் என்ற ஆசை யாருக்கும் வேண்டியதில்லை. ஏனெனில் அப்படி நீங்கள் இடறிக் கீழே விழப் போகிறீர்கள் என்பதற்கு அறிகுறி காணப்பட்டவுடன் ஒரு சுகாதார அதிகாரி ஓட்டமாய் ஓடி வந்து நீங்கள் தரையில் விழாமல் தாங்கி எடுத்துக் கொண்டுபோய் உங்களைக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு மறு காரியம் பார்ப்பார்!

குப்பைத் தொட்டியில் போடும் உரிமை பத்திரிகாசிரியர்களுக்குத்தான் உண்டு என்று அதுகாறும் எண்ணி யிருந்தேன். யாழ்ப்பாணத்துச் சுகாதார அதிகாரிகளுக்கும் அந்த உரிமை உண்டு என்று தெரிந்தது. பத்திரிகாசிரியர்கள் கதை கட்டுரைகளை மட்டும்தான் குப்பைத் தொட்டியில் போடுவார்கள். யாழ்ப்பாணத்துச் சுகாதார அதிகாரிகளோ அந்தக் கதை கட்டுரைகளை எழுதியவர்களைக்கூடக் குப்பைத் தொட்டியில் தூக்கிப்போட்டு விடுவார்கள்!

இது எப்படி எனக்குத் தெரிந்தது என்றால், யாழ்ப்பாணத்தில் நானும் ஸ்ரீ தூரனும் தங்கியிருந்த இரண்டு தினங்களில், ஒரு நாள் மாலை போலீஸ் அதிகாரியைப் போல் உடுப்புத் தரித்த ஒருவர் வந்தார். "ஐயா! இந்த ஊர் ஆலயத்தில் திருவிழா நடைபெறுகிறது, நீங்கள் ஐந்து நிமிடம் வந்து சமுகம் தரவேண்டும்!" என்றார். என் காதுகளை நான் நம்பவில்லை. எப்போதுமே என் காதுகளின் விஷயத்தில் எனக்குக் கொஞ்சம் அவநம்பிக்கைதான். அவரை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "எங்கே வரவேண்டும் என்கிறீர்கள்?" என்றேன். "ஆலயத்துக்கு வர வேண்டும். விழா நடக்கிறது" என்றார்.

ஒருவேளை யாழ்ப்பாணத்தில் ஆலயம் என்பதற்குப் போலீஸ் ஸ்டேஷன் அல்லது சிறைச்சாலை என்ற பொருள் இருக்குமோ என்று யோசித்தேன். எல்லாவற்றுக்கும் போய்ப் பார்த்துவிடலாம் என்று துணிந்து புறப்பட்டேன். கோயிலைச் சுற்றியுள்ள ராஜ வீதிகளில் ஒன்றுக்கு வந்து சேர்ந்தோம். வண்டியிலிருந்து இறங்கி நடக்கத் தொடங்கினோம். என் சட்டைப் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்தேன்; அப்போது ஒரு காகிதம் கீழே விழுந்தது. உடனே அந்தப் போலீஸ் உடுப்பு தரித்த சுகாதார உத்தியோகஸ்தர் அந்தக் காகிதத்தைப் பொறுக்கி எடுத்து வீதி ஓரத்தில் வைத்திருந்த குப்பைத் தொட்டியில் கொண்டுபோய்ப் போட்டார். பிறகு நான் வேண்டுமென்றே கைக்குட்டையைக் கீழே போட்டேன். அதையும் பொறுக்கிக் கொண்டுபோய் தொட்டியில் போட்டார்.



"பெரியசாமி! ஜாக்கிரதை! தப்பித் தவறித் தரையில் விழுந்துவிடவேண்டாம். விழுந்தால் நம்மையும் கொண்டுபோய்த் தொட்டியில் போட்டு விடப் போகிறார்!" என்று எச்சரித்தேன்.

"பார்த்தீர்களா? நம் ஊரில் கோயில் உற்சவம் என்றால் சுற்றுப் பக்கங்களில் எவ்வளவு குப்பையும் கூளமுமாயிருக்கும்? இந்த வீதிகளில் ஒரு குப்பை கூளங்கூட இல்லையே?" என்றார் தூரன்.

"இந்த ஊரில் குப்பை கூளத்துக்கு மெத்த கிராக்கிபோல் தோன்றுகிறது. கறுப்பு மார்க்கெட்காரர்கள் அமுக்கி விட்டார்களோ, என்னமோ?" என்றேன்.

"இல்லை ஐயா! திருவிழாவை முன்னிட்டு வீதிகளைச் சுத்தம் செய்து வைத்திருக்கிறோம்!" என்றார் அதிகாரி.

"ஓகோ! அப்படியா?"

"வீதிகள் தூய்மையாக இருப்பது உங்களுக்குப் பிடித்திருக்கிறதல்லவா?"

"பிடித்திருக்கிறது! ஆனாலும் ஒரு குறை. வீதிகளையெல்லாம் சுத்தம் செய்து வைத்திருந்தால் மட்டும் போதுமா? ஏன் நெடுகிலும் ரத்தினக் கம்பளம் விரித்திருக்கக் கூடாது?" என்றேன்.

"ரத்தினக் கம்பளம் விரித்தால் தரை அழுக்காகி விடும், ஐயா!" என்றார் அந்தச் சுகாதார அதிகாரி.

நாலு வீதிகளையும் சுற்றிப் பார்த்த பிறகு ஆலயத்துக்குள் செல்ல நண்பர் பெரியசாமித் தூரன் விரும்பினார். நான் கண்டிப்பாக மறுத்து விட்டேன்.

" நித்தியமாய் நிட்களமாய் நிராமயமாய் நிறைவாய் [நீங்காச்
சுத்தமுமாய்......"

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார். கடவுள் சுத்த வடிவமாக இருக்கிறார் எனில், அந்த நாலு வீதிகளிலும் அவர் கட்டாயம் இருக்கத்தான் வேண்டும். கடவுளைத் தரிசிக்க ஆலயத்துக்குள் போகவேண்டிய அவசியம் என்ன ?

மேலும், ஒரு கட்டுரை எழுதும்போது எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோ போவது உசிதம் அல்ல. ஆகையால் இடறி விழுகிற கட்டத்துக்கே திரும்பி வந்து சேரவேண்டியதுதான்.

யாழ்ப்பாணத்தில் எங்கே பார்த்தாலும் இடறி விழும் இடமெல்லாம், ஆசிரியர்கள் அல்லது கல்விமான்களாகவே இருப்பார்கள். நகர மண்டபத்தில் நடந்த கூட்டத்தில் ஒரு பிரமுகரைக் குறிப்பிட்டு, " இவர் இன்னார்......பெரிய கல்விமான் (ஸ்காலர்)" என்று ஆசிரியர் பேரின்ப நாயம் அறிமுகம் செய்வித்தார்.

" கல்விமான்கள் இருக்கட்டும், ஐயா ! கல்விமான்களைத்தான் இந்த ஊரில் எங்கே திரும்பினாலும் பார்க்கிறோமே ! கல்விமான் இல்லாத ஒருவரைக் காட்டுங்கள் !" என்று கேட்டேன்.

அந்த நண்பரால் காட்ட முடியவில்லை. என் ஆகாசக்கோட்டை தகர்ந்தது. கல்விமான் அல்லாத ஒருவரைக் கண்டுபிடித்தால், அவரைக் கொண்டு " கல்விமான் அல்லாதார் சங்கம் " ஒன்று ஏற்படுத்தி, அவர்களுக்குத் தனிப்பட்ட உரிமைகளும் சட்டசபை ஸ்தானங்களும் உத்தியோகங்களும் வேண்டுமென ஓர் இயக்கத்தையே ஆரம்பித்து வைக்கலாம் என்று எண்ணியிருந்தேன். அது சாத்தி மாகவில்லை!



மறுபடியும் பள்ளிக்கூட ஆசிரியர்களிடம் வருவோம். யாழ்ப்பாணத்தில் பள்ளிக்கூட ஆசிரியர்களும் ; பள்ளிக்கூடங்களும் ஏராளம்.

" யாழ்ப்பாணத்தின் மாபெரும் கைத்தொழில் என்ன ?" என்று கொழும்பில் உள்ளவர்கள் ஒரு கேள்வி போட்டுக் கொள்வார்களாம். " பள்ளிக்கூடந்தான் !" என்று பதிலும் சொல்வார்களாம். இப்படி அவர்கள் சொல்வதற்குத் தகுந்தாற்போல் ஆசிரியர் ஸ்ரீ ஹாண்டி பேரின்பநாயகம் கையில் ஒரு தடி வைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

பத்து வருஷத்துக்கு முன்னால் ஸ்ரீ பேரின்பநாயகத்தை நான் பார்த்தபோது அவர் கையில் பிரம்பு இல்லை ; இப்போது இருந்தது. அப்போது அவர் பள்ளிக்கூட ஆசிரியர் அல்ல. ஆனால் இப்போது ஹிந்து ' காலேஜ் ' தலைமை ஆசிரியர்.

" ஆகவே இந்தக் கைத்தடியினால் உங்கள் பள்ளிக்கூடத்தில் தொழில் நடத்துவீர்களோ ? பிள்ளைகளை அடித்து வெளுத்து விடுவீர்களோ ?" என்றேன்.

" அதெல்லாம் இங்கே நாங்கள் பிள்ளைகளை அடிக்கிற வழக்கம் இல்லை !" என்றார் ஸ்ரீ பேரின்பநாயகம்.

" அப்படியானால் பெற்றோர்களைத்தான் அடிப்பீர்களோ ?" என்று பீதியுடன் கேட்டேன்.

"பெற்றோர்களையும் நாங்கள் அடிக்க மாட்டோம்......"

"பின்னே, உங்கள் கையில் தடி இருப்பது எதற்காக ?"

"காலில் கொஞ்சம் நீர் கட்டிக்கொண்டிருக்கிறது. ஆகையால் சிறிது சாய்ந்து நடக்கவேண்டியிருக்கிறது. நடப்பதற்கு உதவியாக இந்தத் தடியை வைத்துகொண்டிருக்கிறேன்."

"நீங்கள் சாய்ந்து நடப்பதும் ஒரு அழகாய்த்தான் இருக்கிறது !" என்றேன்.

அந்தக் குறிப்பை அறிந்து ஸ்ரீ ஹாண்டி பேரின்பநாயகம் நானும், ஸ்ரீ பெரியசாமித் தூரனும் ஊருக்குப் புறப்படுகையில் தலைக்கு ஒரு அழகிய கைத்தடி பரிசாகக் கொடுத்தார்.

## 6

**வா**ஸ்கோடிகாமா என்னும் பெயர் கொண்ட கப்பல் தலைவனைப் பற்றி எப்போதோ சரித்திரப் புத்தகத்தில் படித்திருப்பதாக ஞாபகம். அந்தத் தடியன் இப்போது என் முன் எதிர்ப்பட்டால் அவன் கன்னத்தில் நாலு அறை கொடுத்து விட்டு மறு காரியம் பார்ப்பேன். ஆனால், அவன் இறந்து தொலைந்து போய்விட்டான் ! இறந்து போனவர்களின் விஷயத்தில் அஹிம்சையைக் கைக்கொள்ளுவது அவசியமில்லையென்பது என்னுடைய கொள்கை. உயிரோடிருப்பவர்களிடம் அவசியம் அஹிம்சா தர்மத்தை அனுசரிக்க வேண்டியதுதான்.



ஏனெனில் நாம் அவர்களுடைய கன்னத்தில் நாலு அறை கொடுப்பதற்கு முன்னால் அவர்களும் நம்மோடு ஒத்துழைப்பது என்று தீர்மானித்து விடக் கூடும். இறந்துபோனவர்களின் விஷயத்தில் அத்தகைய கவலை இல்லை. ஆகையால், வாஸ்கோடிகாமா மட்டும் இப்போது நம் முன்னால் வந்தால் அவன் கன்னத்தில் நாலு அறை கொடுக்கத் தயங்க வேண்டியதில்லை.

ஐரோப்பாவில் உள்ளவர்கள் கீழ்நாட்டுக்கு வருவதற்கு முதன் முதலில் அந்த வாஸ்கோடிகாமாதான் வழி காட்டினான். அவன் ஒரு போர்ச்சுகீயன். அவனைத் தொடர்ந்து வந்த போர்ச்சுகீயர்கள் இலங்கையில் சில பகுதிகளைக் கைப்பற்றி ஆண்டு வந்தார்கள். அப்பப்பா ! அவர்கள் ஆண்ட காலத்தில் யாழ்ப்பாணத்தார்கள் பட்ட அவதிகள் கொஞ்ச நஞ்சமல்ல. போர்ச்சுக்கல் நாட்டார், கொடுமைக்கும் குரூரத்துக்கும் பெயர் போனவர்கள். இப்போது கூட இந்தியா தேசத்தில் ஒருச் சாண் அகலமுள்ள **கோவா**வில் உட்கார்ந்து கொண்டு அவர்கள் என்ன பாடு படுத்துகிறார்கள், பாருங்கள் ! இருநூறு முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் கேட்க வேண்டுமா ? பற்பல கொடுமைகள் செய்து ஹிந்து மதத்தாரைக் கிறிஸ்துவ மதத்தைத் தழுவத் தூண்டினார்கள். போர்ச்சுகீய ஆட்சியின் போது யாழ்ப்பாணத்து மக்கள் இலை போட்டுச் சாப்பிடப் பயப்படுவார்களாம் ! ஏனெனில் வாசலில் எச்சில் இலை விழுந்தால், இந்த வீட்டார் ஹிந்துக்கள் என்று ஊகித்துக் கொண்டு போர்ச்சுகீய அதிகாரிகள் வீட்டுக்குள் புகுந்து அதிக்கிரமம் செய்வார்களாம். இதன் காரணமாக அந்த நாளில் யாழ்ப்பாணத்தார் இலை போட்டுச் சாப்பிடுவதைக் கைவிட்டுத் தட்டில்

சாப்பிடத் தொடங்கினார்கள். ஆனால், ஹிந்து மதப் பற்றை அவர்கள் இழந்துவிடவில்லை. ஹிந்துமத பக்தி காரணமாக அமாவாசையன்று மட்டும் இலையில் சாப்பிட்டு விட்டு எச்சில் இலையைக் கூரை முகப்பில் செருகி விடுவார்களாம்! நாளடைவில் அது ஒரு குருட்டு மத சம்பிரதாயமாகி இன்றும் யாழ்ப்பாணத்து வைதீக குடும்பங்களில் அமாவாசையன்று எச்சில் இலையைக் கூரை முகப்பில் செருகும் வழக்கம் நடைபெற்று வருகிறது!

கொஞ்சம் யோசித்துப் பார்க்கும்போது வீட்டு வாசலில் எச்சில் இலையைப் போடும் வழக்கத்தைத் தடை செய்த போர்ச்சுகீயர்களும் ஒரு நல்ல காரியத்தைத்தான் செய்தார்களோ என்று தோன்றுகிறது. எதுவும் ஒரு நன்மைக்கே என்று தெரியாமலா நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்? ஆகையால் வாஸ்கோடிகாமா போனால் போகிறான் என்று அவனை மன்னித்து, கன்னத்தில் அறையாமல் விட்டு விடுவோமாக!

* * *

முன் அத்தியாயத்தின் இறுதியில் ஸ்ரீ ஹாண்டி பேரின்பநாயகம் அவர்களின் கைத் தடியைப் பற்றிச் சொல்லி யிருந்தேன். இங்கு அந்த மனிதரைப் பற்றியும் கொஞ்சம் சொல்லத்தான் வேண்டும். அவரை 'மனிதர்' என்றா சொன்னேன்? அது அவ்வளவு பொருத்தமில்லைதான்! ஸ்ரீ 'ஹாண்டி'யை ஒரு மனிதர் என்று சொல்லுவதைக் காட்டிலும் அவரை 'ஒரு ஸ்தாபனம்' என்று சொல்லுவது பொருத்தமாயிருக்கும்.



அவருடைய நீளமான பெயரில் 'ஹாண்டி' Handy) என்பது பழைய போர்ச்சுகீய ஆட்சியின் ஞாபகச் சின்னமாகும். போர்ச்சுகீய ஆட்சியில் கிறிஸ்தவர்களாக மாறிய குடும்பத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ பேரின்பநாயகம். ஆனால், தற்போது யாழ்ப்பாணத்தில் கிறிஸ்துவர்—ஹிந்துக்கள் என்ற வேற்றுமை அதிகம் கிடையாது. ஒரே குடும்பத்தில் அண்ணன் கிறிஸ்துவராயும் தம்பி ஹிந்துவாயும் இருப்பார்கள். ஆனால், எல்லாரும் தமிழர்கள்; தமிழ்ப் பண்பாடு உடையவர்கள்.

ஸ்ரீ ஹாண்டி பேரின்பநாயகமோ கிறிஸ்துவரும் அல்ல; ஹிந்துவும் அல்ல. அவருடைய மதம் காந்தீய மதம்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் யாழ்ப்பாணம் சென்றிருந்த போது ஸ்ரீ பேரின்பநாயகம் அகில இலங்கை யுவர் காங்கிரஸின் காரியதரிசியாயிருந்தார். அப்போது அவர் யுவராகவும் இருந்தார். இன்றைக்குத் தலை நரைத்த முதியவராயிருக்கிறார். இந்த மாறுதலுக்குக் காரணமான இரண்டு நிகழ்ச்சிகள் ஒரே நாளில் ஒரே சமயத்தில் அவருடைய வாழ்க்கையில் நேரிட்டன என்று அறிந்தேன்.

ஸ்ரீ பேரின்பநாயகம் தம் வாழ்க்கையில் இரண்டு பேரைக் காதலித்தார். அவர் காதலித்தவர்களில் ஒருவர் காந்திமகான்; இன்னொருவர் அவரது மனைவியார்.

1947-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ந் தேதி மாலை 6-மணிக்கு ஸ்ரீ பேரின்பநாயகத்தின் அருமை மனைவி இறந்து போனார். இந்தப் பொறுக்க முடியாத

